உ

கடவுள் துணை.



# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ககூ.] துர்மதி- ௵ ஐப்பசி-மீ [பகுதி கஉ.
Vol. XIX. October—November—1921. No. 12.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா-8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

## "செந்தமிழ்" நேயர்களுக்கு வேண்டுகோள்.

இம் மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால், சென்ற பத்தொன்பதுவருட
காலமாகத் தமிழ்மொழியின்வளர்ச்சிகருதி மாத மொருமுறை வெளி
யிடப் பெற்றுவரும் இச் "செந்தமிழ்"ப் பத்திரிகையானது, பல பண்டிதர்
களாலும் எழுதிவரப்பெறும் அரியவிஷயங்களை எளிதில்எல்லோருமுணர
வெளியிடும் பெருமைவாய்ந்ததென்பது யாவரும் அறிந்ததே. அது,
செந்தமிழ்நேயர்களின் அபிமானத்தையும், பண்டிதர்களின் ஆதரவையுங்
கொண்டே இப்பகுதியோடு பத்தொன்பதாந்தொகுதி முற்றுப்பெற்றிருக்
கிறது. இனி இருபதாந்தொகுதி தொடங்கப்பெற்று அதன் முதற்
பகுதி கூடியசீக்கிரம் வெளிவரும். அப் பகுதி வழக்கம்போல் அங்கத்
தினர்களுக்கும், செந்தமிழ்ச்சந்தாதாரர்களுக்கும் அத் தொகுதியின்
வருஷச்சந்தாவுக்கு வி. பி. யில் அனுப்பப்பெறும். செந்தமிழபிமானி
கள் வழக்கம்போல் வி. பி. யை அன்புடன்பெற்றுப் பத்திரிகையை ஆத
ரித்துவருவதோடு தங்கள் நண்பர்களையும் பத்திரிகையைத் தருவித்துப்
படித்துவரும்படி தூண்டவும், பண்டிதர்கள் வழக்கம்போற் சிறந்த
விஷயதானமளித்துச் செந்தமிழைச் சிறப்பித்துவரவும் வேண்டிக்
கொள்ளப் பெறுகிறார்கள்.

லெக்ஷ்மிநாராயணையர்,
மானேஜர்.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
28—11—21.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] துர்மதி- ஷு ஐப்பசி- மீ [பகுதி கஉ.
Vol. XIX. October—November—1921. No. 12.

## அரசியலாராய்ச்சி.*

இதிற்கூறியவிஷயங்களாவன:—

1. உலகினுக்கு அரசன் றெய்வமென்பது.
2 உலகினுக்கு அரச னுயிராயிருக்கின்றானென்பது.
3. அரசிலாவுலக மில்லையென்பது.
4. அரசியலைத் திருக்குறளில், உடு-அதிகாரத்திலும், விநாயகபுராணத்தில் அரசியற்படலத்திலும் விரிவாகக்கூறியிருக்கின்றதென்பது.
5. அரசன் ஆறங்கம் அறுவகைத்தொழில், ஐவகைக்குழு, ஐவகைச் சுற்றம், எண்பேராயங்களுடனிருந்து, நாட்டிற் கைவகைப்பயந் தீர்த்து, எட்டுவகைக்குற்றஞ் சாராமல், நால்வகையுபாயஞ்செய்து, நீதியாகிய செங்கோல்செலுத்தவேண்டுமென்பது.
6. அரசனீதியைச் செங்கோல் என்பதற்குக் காரண மின்னதென்பது.
7. அரசன்செங்கோலால் உலகிற்குப் பல நன்மையுண்டாமென்பது.
8. அரசனே பசுக்களையும், உலகினரையும், அறவோரையும், திருவேடத்தாரையும், திருக்கோயில்வழிபாடுகளையுங் காப்பவனென்பது.
9. அரசன் உலகினரை யின்னவிதமாகக் காக்கவேண்டுமென்பது.
10. அரசனுக்குக் குடிகள் ஆறிலொருகடமைகொடுக்கவேண்டுமென்பது.
11. அரசன் எப்படிநடப்பானோ அப்படியே குடிகளு நடப்பார்களென்பது.
12. தீயோர்களைக்கொல்லுதல் அரசனுக் குரியதருமமென்பது.
13. அரசன் கொடுங்கோலனுபின் மழையில்லாமைமுதலிய கேடுண்டாமென்பது.

* இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் இருபதாம்வருடக் கொண்டாட்டத்திற் செய்த பிரசங்கம்.

14. அரசனுக்குப் புலவர்களும் புலவர்கட்கு அரசனும் வேண்டுமென்பது.

15. அரசன் புலவரைச்சார்ந்திருத்தலே அடையும்பயன்களிற் பெரும்பயனாகக் கொண்டிருத்தல்வேண்டுமென்பது.

16. அரசனீதியா லரசாண்டு நெடுநாட்புண்ணியமும் புகழும்பெற்றிருந்து பின் றுறந்து தவஞ்செய்தல்வேண்டுமென்பது.

17. இவ்வரசியலாராய்ச்சியிற்கூறிய நன்மைகளெல்லாமமைந்த ஐந்தாம் ஜார்ஜுமன்னர்பெருமா னீடூழிவாழ்கவென்பது.

---

உலகமெல்லாவற்றிலுமுள்ள சராசரங்களையெல்லாங் காக்கும் பேரரசாகிய சிவபிரான் மூத்தபிள்ளையாராகிய விநாயகருக்குப் பட்டாபிடேகஞ் செய்துமகுடஞ்சூட்டி அக்காவலனுக்கு, இளவரசாக்கிவைத்திருக்கின்றனர்.

1. உலகிலெல்லார்க்குந் தெய்வம் அரசனேயாவான்.

"குலமகட்குத்தெய்வங்கொழுநனேமன்ற
புதல்வர்க்குத்தந்தையுந்தாயு—மறவோர்க்
கடிகளேதெய்வமனைவோர்க்குந்தெய்வ
மிலைமுகப்பைம்பூணிறை" (இறை—அரசன்)

எனக் குமரகுருபரசுவாமிகள் நீதிநெறிவிளக்கத்திற் கூறியருளியது காண்க. திருக்குறளிலும் "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்—கிறையென்று வைக்கப் படும்" என்றார் (இறை-கடவுள்). "அருளுமேலரசாக்குமன் காயுமேல்-வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்" "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி-கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" (ஒளி-தெய்வத்தன்மை) எனச் சீவகசிந்தாமணியிற்கூறியிருக்கின்றார். "இளையரினமுறைய ரென்றிகழார் நின்ற-வொளியோ டொழுகப் படும்" எனத் திருக்குறளிற் கூறினார். ஒளியென்பதற்கு அரசனிடத்திலுள்ள தெய்வத்தன்மையென உரைகூறியிருக்கின்றார். ஒளியோடொழுகுதலாவது அரசன் கடவுளுந் தா மனிதருமாக நடத்தல். இன்னுந் திருக்குறளிலே அரசியல் முதலதிகாரத்திற்கு இறைமாட்சியெனப் பெயரிட்டதற்கு அரசன் உலகபாலராகிய தேவாம்சமாயிருந் துலகங்காத்தலின் இறைமாட்சியெனக் கூறினார் என வுரை வரைந்திருக்கின்றார். "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" எனத் திருவாய்மொழியிற் கூறியருளியிருக்கின்றார்.

"கார்க்கவியும்புகழவருந்தண்டலையார்வளநாட்டினல்லநீதி
மார்க்கமுடனடந்துசெங்கோல்வழுவாமற்புவியாளும்வண்மைசெய்த
தீர்க்கமுள்ளவரசனையேதெய்வமென்பார்கொடுங்கோன்மைசெலுத்திநின்ற
மூர்க்கமுள்ளவரசனுந்தன்மந்திரியுமாழ்நரகின்மூழ்குவாரே"

எனத் தண்டலையார்சதகத்திற் கூறினர். 'நீதிமன்னன் நிலத்துக்குத் தெய்வம்' என்பது பழமொழி. இந்திரன், வாயு, யமன், சூரியன் முத லோரமிசங்களால் அரச னுண்டாக்கப்பட்டான் எனத் தருமநூலிற் கூறியிருக்கின்றதாம்.

2. இனி அரசன் உலகினுக் குயிராயுள்ளான் என்பர். "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே—மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம், அத னால், யானுயி ரென்ப தறிகை-வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே" எனப் புறநானூற்றில் (௧௮௬-ஆவது கவி) கூறியிருக்கின்றார். இக்கருத் தமைய, நைடதம் நகரப்படலத்தில் "தன்னுயி ராமென வுலகிற் றங்கிய-மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்" எனக் கூறியிருக்கின்றார்.

"கோவரியசீவன்குடிகளுடலாவார்
சீவன்சும்மாவிருக்கத்தேகமுழைத்தோம்புதல்போற்
பூவலயமீதிற்றம்பூட்சிகளினுலுழைத்துக்
காவலனைக்காக்கக்கடனுங்குடிகளுக்கே"

என நீதிநூலிற்கூறிய இக்கவியிலே, 'கோவரியசீவன் குடிகளுடலாவார்' எனக் கூறியதுகாண்க. கோ—அரசன். பூட்சி—உடம்பு.

3. இங்ஙனமாதலால், அரசிலாவுலகமில்லையெனக் கருதல்வேண்டும். விருக்ஷங்கட்கரசாக அரசிருக்கின்றது; அதற்குத் தருவேந்து என்றும் பெயருண்டு. பறவைகட்கரசாகக் கருடனிருக்கின்றது; அதற்குப் பறவைவேந்தன் என்றும் பெயருண்டு. மிருகங்கட் கரசாகச் சிங்கமிருக் கின்றது; அதற்கு மிருகராசன் என்றும் பெயருண்டு. தேவர்கட்கரசாக இந்திரனிருக்கிறான்; அவனுக்குத் தேவர்கோன் என்றும் பெயருண்டு. அசுரர்கட்குச் சூரன்முதலோர் அரசாகவிருந்தனர். அரவுகட்கரசாக ஆதிசேடனிருக்கின்றான்; அவனுக்குச் சர்ப்பராசன் என்றும் பெயருண்டு. உலகில் மானிடர்க்கரசாக இருப்பவற்கு நரபதி என்று நிகண்டிற் பெயர் கூறியிருக்கின்றார். இக்கருத்தெல்லாம் விளங்க, இராமாயணத்தில்,

"வள்ளுறுவயிரவாளரசில்வையக
நள்ளுறுகதிரிலாப்பகலுநாளொடு
தெள்ளுறுமதியிலாவிரவுந்தேவுட
னுள்ளுறையுயிரிலாவுடலுமொக்குமே"

"தேவர்தம்முலகினுந்தீமைசெய்துழன்
மாவலியவுணர்கள்வைகுநாட்டினு
மேவெவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்தலைவரையின்மைகண்டிலம்"

"முறைதெரிந்தொருவகைமுடியநோக்குறின்
மறையவன்வகுத்தனமண்ணின்வானிடை
நிறைபெருந்தன்மையினிற்பசெல்வன
விறைகளையில்லனயாவைகண்டிலம்"

என இராமபிரான் வனஞ்சென்றபின் அரசிலாவுலகமில்லை; ஆதலால் இனி நீ அரசாயிருக்கவேண்டு மெனப் பரதனைநோக்கி வசிட்டர்கூறியதாகக் கம்பர் கூறியிருத்தல் காண்க.

4. இவ்வரசியலைத் திருக்குறளில் விரிவாக இருபத்தைந்ததிகாரத்திற் கூறியிருக்கின்றார்; விநாயகபுராண மரசியற்படலத்தில், நூற்றைம்பத்தாறு கவிகளாற் கூறியிருக்கின்றார்; விரிவஞ்சி யீண் டவைகளை யெடுத்துக் கூறவில்லை.

5. இனி அரசனீதிக்கும் வெற்றிக்கு மேதுவாகவுள்ளன ஆறங்க மென்பர்; அவற்றைப் "படைகுடி கூழமைச்சு நட்பா ணாறு—முடையா னரசரு ளேறு" என்னுந் திருக்குறளிற் காண்க. கூழ்—பொன். இவ்வாறங்கமுங்கொண்டு, அறுவகைத்தொழில், ஐவகைக்குழு, ஐவகைச் சுற்றம், எண்பேராயத்துடனிருந்து, நாட்டிற்கு ஐவகைப் பயந்தீர்த்து, எட்டுவகைக்கேடுஞ்சாராமல், நால்வகை யுபாயமுஞ்செய்து நீதியாகிய செங்கோல் செலுத்தவேண்டும். அறுவகைத்தொழிலாவன—"ஓதலே வேட்ட லீத லாலகோம்பல் படை பயிற்றல்-மேதகு போர்செய் தீட்டல் வேந்தர்செய் தொழில்க ளாறே" எனச் சூடாமணிநிகண்டிற்கூறுதல் காண்க. ஐவகைக்குழுவாவன-மந்திரிகள், புரோகிதர், சேனபதிகள், தூதுவர்கள், ஒற்றர்கள் என்றிவர்களாம். ஐவகைச்சுற்றமாவன—மடைத்தொழிலோர், நிமித்தம்பார்ப்பவர், ஆயுள்வேதர், நட்பாளர், பார்ப்பார் என்றிவர்களாம். மடை—சோறு.

"தடுக்குமந்திரிபுரோகிதன்சேனதிற்றூதனொற்ற
னெடுத்தவந்திருந்தசேனைக்கிறைவனைங்குழுவென்றாகு
மடைத்தொழிலோர்நிமித்தம்வகுப்பவராயுள்வேத
ரடுத்தநட்பாளர்பார்ப்பாரைவகையுறுதிச்சுற்றம்"

எனச் சூடாமணிநிகண்டிற் கூறுமாறுகாண்க. எண்பேராயமாவன—காணத்திபலவர், கருமவிதிகள், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், குதிரைவீரர் எனச் சிலப்பதிகாரவுரையிற் கூறினர். ஐவகைப்பயமாவன—திருவிளையாடற்புராணம் பழியஞ்சின படலத்தில் "அஞ்சுபயந்தீர்த்தரசாளு—முறைமையு நன்றால்" எனத் தொகைமட்டுங் கூறினர். பெரியபுராணத் திருவாரூர்ச்சிறப்பில்,

''மாநிலங்காவலனுவான்மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தா
லூனமுறுபகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மா
லானபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ''

என வகைசெய்து கூறியிருக்கின்றார். எண்வகைக்கேடாவன—"விட்டில் தன் னரசு நால்வாய் மிகுமழை மிகுகாற் றேடே-நட்டம்வேற் றரசு கிள்ளை நாடுறுங் கேடெட் டாமே" எனச் சூடாமணிநிகண்டிற் கூறினர். நால்வாய்-யானை. நட்டம்—அழிவு. கிள்ளை—கிளி. நால்வகையுபாயமாவன—சாம பேத தான தண்டமாம். பாரதங் கிருட்டினன்றூதுச்சருக்கத்தில், "ஞானமன்போடினி துரைத்து ஞானமுனியகன்றதற்பின்சாமபேத-தான தண்டமெனநிருபர்தருமமுறைமையிற்புகலுந்தகுதிநோக்கி" எனக் கூறியது காண்க.

6. இனி அரசனீதியைச் செங்கோலென்பர். நீதியானது ஒருபாற் கோடாமற் செவ்விய துலாக்கோல்போலிருத்தலா லென்க.

7. இச்செங்கோலால், உலகிற் பல நன்மையுண்டாமென்க. விநாயக புராணம் அரசியற்படலத்தில்,

''மழைவளஞ்சுரக்குமாறும்வயனிலம்விளையுமாறும்
விழையறம்வளர்க்குமாறும்வேதநூல்விளங்குமாறுந்
தழைபொருளீட்டுமாறுஞ்சமரிடைவெல்லுமாறும்
பிழைதபவாழுமாறும்பிறழ்தராக்கோலினாகும்''

எனக் கூறியதுகாண்க. "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்-நின்றது மன்னவன் கோல்" "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட-பெயலும் விளையுளுந் தொக்கு" எனத் திருக்குறளிலுங் கூறினர். பெயல்—மழை.

8. இச்செங்கோலரசனே பசுக்களையும், உலகத்தையும், அறவோர்களையும், திருவேடம்பூண்டவர்களையும், திருக்கோயில்வழிபாடுகளையுங் காப்பவனாவன்.

''ஆவையும்பாரையுமற்றறவோரையுந்
தேவர்கள்போற்றுந்திருவேடத்தாரையுங்
காவலன்காப்பவன்காவாதொழிவனேன்
மேவுமறுமைக்குமீளாநரகமே''

''முன்னவனார்கோயிற்பூசைகண்முட்டிடின்
மன்னர்க்குத்தீங்குளவாரிவளங்குன்றுங்
கன்னங்களவுமிகுத்திடுங்காசினிக்
கென்னருணந்தியெடுத்துரைத்தானே''

எனத் திருமந்திரத்திற்கூறுதல் காண்க. "ஆபயன் குன்று மறுதொழி லோர் நூன்மறப்பர்—காவலன் காவா னெனின்" எனத் திருக்குறளிலுங் கூறினர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் சமணருடன் வாதிட்டு, வையையாற்றில் ஏடெதிரேறவிட்டபோது கூறியருளிய திருப்பாசுர முதற்றிருப்பாட்டில், 'வாழ்கவந்தணர்வானவராவினம்—வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக' எனக் கூறியிருக்கின்றது. இத் திருப்பாசுரத்தில் ஒவ்வொருபாடலுக்கும் பொருள்கூறிவந்த சேக்கிழார்நாயனர், 'வேந் தனுமோங்குக' என வாழ்த்தியதற்குப் பொருள்கூறியதாவது, "ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை—மூளு மற்றிவை காக்கு முறைமைபால்" எனக்கூறியது காண்க.

9. அரசன் உலகினை யெவ்வாறுகாக்கவேண்டுமெனில்?

"எந்தவேளையினுநொந்தவர்துயர்கேட்டிடரிழைப்பவன்றனதேக
மைந்தனேயெனினும்வதைத்திடவொல்கான்மாக்களின்சுகநலமன்றிச்
சிந்தனைமற்றோர்பொருளினிற்செலுத்தான்றீமொழிகனவினும்புகலான்
றந்தைபோற்றாய்போலெவரையுமோம்புந்தன்மையனேயிறையன்றே"

என நிநூலிற்கூறியவாறு காக்கவேண்டும். 'இடரிழைப்பவன்றன தேகமைந்தனேயெனினும்வதைத்திடவொல்கான்'—என்பதற் குதாரண மாக, திருவாரூரிலிருந்த மநுச்சோழனென்பவன், தன்புதல்வன் பவனி வருங்கால் ஒருபசுக்கன்றைத் தேர்க்காலால் வதைசெய்தானென்று அப் புதல்வனை வீதியிற்கிடத்தித் தன்றேர்க்காலால் வதைசெய்தான். இத னைப் பெரியபுராணத்தில்,

"ஒருமைந்தன் றன்குலத்துக்குள்ளானென்பதுமுணரான்
றருமந்தன்வழிச்செல்கைகடனென்றுதன்புதல்வன்
மருமந்தன்றேராழியுறவூர்ந்தான்மநுவேந்த
னருமந்தவரசாட்சியரிதோமற்றெளிதேயோ"

எனக் கூறியிருத்தல் காண்க. இன்னும்,

"வடவிழ்பைந்தாரோயிமையோர்பதம்பெறினு
நாடுகெடுக்கநன்கலவைபுரியார்
வேடர்புரிவேட்டஞ்செய்யார்வினைதருஞ்சூ
தாடல்புரியார்மட்பெண்ணரசரே"

"குணங்கெடுமுட்செடியையெலாம்புறத்தொதுக்கிமணமுளதாய்க்கோலிநாட்டி
யிணங்கியிருந்ததைப்பிரித்துப்பிரிந்ததையெல்லாமிணக்கியிடுகிர்வார்த்து
வணங்கியிருந்ததையுயர்த்தியுயர்ந்ததையெல்லாம்வணக்கிமலரேகொய்யு
மணங்குறுபூந்தோட்டம்வைத்தான்போலவுமேயரசியல்புமமைந்ததம்மா"

என வாசிட்டத்திற் கூறுதல் காண்க.

10. இங்ஙனங் காக்கும் அரசனுக்குக் குடிகள் ஆறிலொருகடமை கொடுக்கு முறைமையுடையார்களென்பர். "சிறந்தீர் ஞாலஞ் செய்தொழில் யாவையு-மறைந்திடில் வேந்தனுக் காறிலொன்றுமே" எனத் திருமந்திரத்திற்கூறினர். திருவிளையாடற்புராணத்தில், "ஆறிலொன்று கொற்றவர்கடமைகொள்ளப் பண்டியிற் கொடுபோய்த்தென்னு-டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார்" எனக் கூறினர். இக்கவியிலே அரசனுக்குரிய ஆறிலொருபங்குநீங்கக் குடிகள் கொள்கின்ற ஐந்து பங்கிற்கு வகையுங் கூறினரென்க. "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கலென்றாங்-கைம்புலத்தா றோம்ப றலை" என்ற திருக்குறளில், 'இங்ஙனமில்வாழ்வானுக் கைந்துகூறுவேண்டுதலின் அரசனுக் காறிலொரு கடமையாயிற்று' என உரை கூறியதுங் காண்க.

11. இவ்வியல்புடைய அரசனெப்படி நடப்பனோ அப்படியே குடிகளுநடப்பார்கள். யதாராஜா ததா ப்ரஜா என்ற வாக்கியத்தாலறிக. "வேந்தனுலகைமிகநன்றுகாப்பது-வாய்ந்தமனிதர்களவ்வழியாநிற்பர்" எனத் திருமந்திரத்துங் கூறுதல் காண்க.

12. அரசன் இவ்வகை நன்மை யெல்லாமுடையவனுயினுந் தீயோரைக் கொல்லுதல் அவ்வரசனுக் குரியதருமமாம். "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்-களைகட் டதனொடு நேர்" (பைங்கூழ்-பயிர்) எனத் திருக்குறளினும்,

"தத்தஞ்சமயத்தகுதிநில்லாதாரை
யத்தன்சிவன்சொன்னவாகமநூனெறி
யெத்தண்டமுஞ்செய்யுமம்மையிலிம்மைக்கே
மெய்த்தண்டஞ்செய்வதவ்வேந்தன்கடனே"

எனத் திருமந்திரத்திலுங் கூறுதல் காண்க.

13 இம்முறையின்றி அரசன் கொடுங்கோலனுயிருப்பின் மழையில்லாமைமுதலிய கேடுண்டாமென்பர். "முறைகோடிமன்னவன்செய்யி னுறைகோடி-யொல்லாது வானம்பெயல்" (உறை-பருவமழை.) "நாடோறு நாடி முறைசெய்யாமன்னவ-னுடோறுநாடுகெடும்" எனத் திருக்குறளிற் கூறியது காண்க. இக் "கொடுங்கோன்மன்னவன்வாழுநாட்டிற்-கடும்புலி வாழுங்காடுநன்று" என்பர்.

"படுங்கோலமறியாமற்றண்டலையார்திருப்பணிக்கும்பங்கஞ்செய்வார்
நெடுங்கோலுந்தண்டமுமாவீணுகவீணனைப்போனீதிசெய்வார்
கெடுங்கோபமல்லாமல்விளைவுண்டோமழையுண்டோகேள்வியுண்டோ
கொடுங்கோன்மன்னவனுட்டிற்கடும்புலிவாழுங்காடுகுணமென்பாரே"

எனத் தண்டலையார்சதகத்திற் கூறுதல் காண்க.

14. இங்ஙனங் கொடுங்கோலின்றிச் செங்கோல்செலுத்துமரசனுக்குப் புலவர்களும், புலவர்கட் கரசனும் வேண்டும்: அது எது போலிருக்குமெனில், இரவினுக்குச் சந்திரனும் சந்திரனுக் கிரவும் சிறந்திருப்பதுபோலிருக்குமென்க. அன்றி, அரசனுக்கறிவுறுத்துங் காலத் தறிவுறுத்தி அவன் பெருமை, கொடை, வீரம், நாடு, நகர்முதலியவற்றைச் சிறப்பித்துக்கூறுவோர் புலவர்களே யாவர். புலவர்கட்கு நன்கு மதித்துச் சிவிகை, யானை, குதிரை, ஆடை, அணிகலம், பொன், மனை, நகர், முதலியவைகளை வரிசையாக வுதவிச் சிறப்புச்செய்வோன் அரசனெனப்படுவான் என்பதனாலுங் கொள்க.

15. முன்னுள்ள அரசர்களெல்லாம் புலவரைச் சார்ந்திருத்தலை தாங்களுடையும் பயன்களிலே பெரும்பயனாகக் கொண்டிருந்தார்கள். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனென்பான் கூறியகவியிலே சபதங்கூறியதை நோக்கவேண்டும். "என்னைப் பழித்த வேந்தரைப் போரிற் சிதறப் பொருது வென்றிலேனாயின், மாங்குடிமருதன்முதலான புலவர்பலரும் என்னைப் பாடாது என்னிலவெல்லையை விட்டு நீங்குக" என்று சபதங்கூறினான். இதனால், எல்லாப்பொருளினும் பெரும்பொருளாகப் புலவர்களையே கொண்டிருந்தானென்பது விளங்குவதாம். "ஓங்கியசிறப்பினுயர்ந்தகேள்வி-மாங்குடிமருதன்றலைவனாக-வுலகமொடுநிலைஇயபலர்புகழ்சிறப்பிற்-புலவர்பாடாது வரைகவென்னிலவரை" என்ற இவ்வடிகள் அவ்வரசன்கூறியபாட்டி லுள்ளன. புறநானூறு ௭௨-ஆவதுபாட்டிற் காண்க.

16. இங்ஙனமாக அரசாண்டு வேள்விமுதலிய பல வறங்களையுஞ் செய்துபுண்ணியமும் புகழும்பெற்று நெடுங்காலங்கழித்திருக்கின்ற அரசன் றுறந்துபோய்த் தவஞ்செய்தல்வேண்டுமென்பர். இராமாயணம் அயோத்தியாகாண்டம் மந்திரப்படலத்தில்,

"ஆதலாலிராமனுக்கரசைநல்கியிப்
பேதைமைத்தாய்வரும்பிறப்பைநீக்குவான்
மாதவந்தொடங்கியவனத்தைநண்ணுவேற்
கியாதுநங்கருத்தெனவினையகூறினான்"

என மந்திரிமுதலானவரைநோக்கித் தசரதமகாராசன்கூற, உடனே வசிட்டமகாமுனிவர் "புண்ணியந்தொடர்வேள்விகள்யாவையும்புரிந்த-வண்ணலேயினியருந்தவமிபற்றவுமடுக்கும்" என வுடன்பட்டுரைத்தவாறு காண்க.

17. இவ்வரசியலாராய்ச்சியி லெடுத்துக் கூறிய நன்மைகளெல்லாமமைந்து நம்மைக் காத்தல்செய்திருக்கின்ற ஐந்தாம்ஜார்ஜ் மன்னர்பெருமான் நீடூழிவாழ்க. சுபம். சுபம். சுபம்.

இங்ஙனம்,

திருவாவடுதுறையாதீனவித்துவானும், மதுரைத்தமிழ்ச்சங்கத்துச்
சைவநூற்பரிசோதகருமாகிய,

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்,

உ

# குமரிக்கருமணல்.*



## பீடிகை.

"ஐயக் கடிஞை கையி னேந்தி
மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணு நரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
யுண்டொழி மிச்சிலுண் டோடுதலை மடுத்துக்
கண்படை கொள்ளுங் காவலன்" தங்கிய

"சிந்தா விளக்கின் செழுங்கலை நியமம்" விளங்கிய

மதுரைமாநகரில் வளரும் தமிழ்ச்சங்கப் புலவீர்காள்! "மிக்கசெல்வத்து விளங்கியோர்வாழும் தக்கணமதுரை" யென அக்காலத்துச் சிறப்பு வாய்ந்ததுபோலவே இக்காலத்தும் முதன்மைபெறமுயன்றுவரும் மதுரைவாசிகளே! கல்வி ஒருங்கே உருக்கொண்டுவந்ததுபோல் இவண் குழுமியிருக்கும் உங்கள்முன்பு என்சிற்றறிவுக்கெட்டிய சிலவிஷயங்களை எடுத்துச்சொல்லும்பொருட்டு வந்தேன்.

நான் உங்களுக்கு விளக்கிக்காட்டுவதாகக் குறித்துவந்த விஷயம் "குமரிக்கருமணல்" என்பது.

### குமரி—ஒருநதி

சுத்தநதிகள் ஏழிற் குமரி ஒன்று என்பதும், அது பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டுக்குத் தெற்கெல்லையாக இருந்தது என்பதும் பழையநூல்களிலிருந்து அறியக்கிடக்கின்றன. கன்னி, குமரி என்ற பெயர்களினாலே அது என்றும் அழியாத்தன்மையுடையது என்று தெரிகிறது. அத்தன்மையினாலேதான் அது பலவூழிகள் கழிந்தும் இன்றளவும் இலங்கிநிற்கின்றதுபோலும். இப்போது அது ஒருநதியைக் குறிக்காமல் இந்தியாவின் தெற்குக்கோடியிலுள்ள முனைப்பாகத்தைக் குறிக்கின்றது.

---

* இது மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் இருபதாம்வருடக் கொண்டாட்டத்திற் படிக்கப்பட்டது.

## ஒரு பழையகதை

இக்காலத்தில் ஹிந்துக்களாகியநாம் எப்படிக் கங்காஸ்நானம் செய்து நம் பாவங்களைப் போக்கலாம் என்று நினைத்துவருகிறோமோ அதுபோலவே முன்காலத்திற் கங்கைக் கரையில் வசித்தவர்கள் குமரி யாற்றிலாடித் தம் பாவங்களை ஒழிக்கலாமென்று நினைத்துவந்ததாகத் தெரிகிறது. மணிமேகலையில் 'ஆபுத்திரன்றிறமறிவித்தகாதை'யில்,

"வார ணாசியோர் மாமறை முதல்வ
ஞரண வுவாத்தி யரும்பெறன் மனைவியான்
பார்ப்பார்க் கொவ்வாப் பண்பி னொழுகிக்
காப்புக்கடை கழிந்து கணவனை யிழந்தே
னெறிபய முடைமையி னிரியன் மாக்களொடு
தெற்கட் குமரி யாடிய வருவேன்"

என்று சாலி தானொழுகிய தீயவொழுக்கத்தாற் கணவனைப் பிரிந்து கன்னியாகுமரிக்கு நீராடச்சென்ற விவரத்தைத் தெரிவிக்கிறாள். இன்றும் நாம் குமரிக்கடலாடிவருதலை விசேஷமாகவே மதித்துவருகிறோம். கோடைநாட்களின்வெப்பத்தைத் தணித்துக்கொள்ளவும் அங்கே கனவான்கள் போய்வருவதுண்டு.

## அரிசிமணற்கதை

இக்குமரிக்கரையின்கண், பார்வதியின் பல அவசரங்களுள் ஒன்றாகிய பகவதி தேவிக்கு ஒருகோயி லுள்ளது. அக்கோயிலைச்சுற்றிப் பலவர்ணங்களையுடைய மணல் பரந்துகிடக்கின்றது. இம்மாதிரியான மணல் திருவனந்தபுரஸமஸ்தானத்திற் பல இடங்களிலும் திருநெல் வேலியிலும் கீழ்கடற்கரையோரமாய் விசாகபட்டினம்வரை பல இடங்களிலும் கிடைப்பதாகச்சொல்லப்படுகிறது. குமரிமுனையிலுள்ள மணல் அரிசிபோன்ற உருவத்தையுடையதாகக் காணப்படுகிறது. முற்காலத்திற் சிவபெருமான் அத்தலத்திற் பார்வதிதேவியை மணப்பதாக இருந்ததாகவும், அதன் நிமித்தம் பல ஏற்பாடுகள் செய்யப்பட்டனவாகவும், அங்குவருபவர்களுக்கு அன்னமளிப்பதற்காக ஏராளமாய் அரிசி வந்திருந்ததாகவும், கடைசியிற் கல்யாணம் நடக்காமற்போகவே வந்த அரிசியெல்லாம் மணலாய் மாறிப்போனதாகவும், அவ்வரிசியே இக்காலத்தில் அரிசிமணல் என வழங்கப்படுவதாகவும் ஒரு புராதனக்கதை

யுண்டு. அது எவ்வாறுபினுமாகுக. இற்றைஞான்று அது புத்திக் கூர்மையுள்ள ஒருசாராருக்கு அபரிமிதமாக அன்னமளிப்பதை நாம் அறிகிறோம். அது எப்படியென்பதை எடுத்துச்சொல்லுகிறேன்.

## பழையகாலத்து வெளிச்சம் உண்டாக்கும் வழிகள்.

ஆதிகாலந்தொட்டு மனிதர்கள் இருளடைந்த இடங்களில் வெளிச்சம்பெறுவதற்குப் பலவுபாயங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். நவீன காலத்தில் நாகரிகம் மலிந்த நம்நகரங்களில் தெருக்களிலும் பொதுத் தலங்களிலும் செல்வர்வீடுகளிலும் ஒருபொத்தானை அழுத்துவதினாலே யோ அல்லது ஒருகுமிழைத் தாழ்த்துவதினாலேயோ ஜனங்கள் மின்சார ஒளியை எழுப்பி இருளை அகற்றுகிறார்கள். இவ்வளவு சௌகரியம் பண்டைக்காலத்திற் கிடையாது. முற்காலத்தில் நம்நாடுகளிற் சுழுந்து நாணல் முதலியவைகளை எரித்தோ, அல்லது பந்தங்கள்கட்டி எண்ணெ யிற் றோய்த்து எரித்தோ, வெளிச்சந்தோன்றச் செய்தார்கள். பெரும் பாணாற்றுப்படையில்,

> "அந்நுணவிர்புகை கமழக் கைமுயன்று
> ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
> செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்" அதாவது,

"தீக்கடைகோலாலே அழகிய நுண்ணியதாய் விளங்கும் புகை முற்படப் பிறக்கும்படி கையாலே கடைந்துகொண்ட சிவந்தநெருப்பினையுடைய கடைக்கொள்ளியாற் றுளையிட்ட கரியதுளையினையுடைய குழலாலெழுப் பின" என்று தீ பெறுகிறவழியைச் சொல்லியிருக்கிறார்கள். இன்னும் குறிஞ்சிப்பாட்டில்,

> "..........................வளமனைப்
> பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
> யந்தி யந்த ணரயரக் கானவர்
> விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த" அதாவது,

"செல்வத்தையுடைய மனைகளிற் பொலிவுபெற்ற தொடியினையுடைய மகளிர் விளக்கை அவ்விடத்தே கொளுத்தி அந்திக்காலத்திற் றொழிலை நிகழ்த்த, அக்காட்டில் வாழ்வார் விண்ணைத் தீண்டுகின்ற பரணின்மேலே தீக்கடைகோலாலே நெருப்பைப் பிறப்பித்து எரிப்ப" என்று சொல்லப் பட்டிருக்கிறது. அக்காலத்துப் பெண்டிர்கள் செல்வச்செருக்காற் றம்

குலத்திற்குரிய நற்குணங்களைக் கைவிடாது, தாமே விளக்கைக்கொளுத்துவதாகவும், அதனுடன் நில்லாமல் அந்திக்காலத்துத் தொழிலாகிய விளக்கை நமஸ்கரித்தலைச் செய்துவந்ததாகவும் அறிகிறோம். பின்னர், சக்கிமுக்கிக்கல்லும் பஞ்சும் எஃகும் உபயோகப்பட்டுவந்தன. இதே மாதிரிதான் ஐரோப்பாவிலுள்ள மேல்நாட்டுத் தேசங்களிலு மிருந்துவந்தது. ஆனால் அவர்கள் படிப்படியாய் மேன்மேலும் பதார்த்தங்களின் குணங்களை ஆராய்ந்து பலவழிகளிலும் சுகவாழ்வுக்கு யோக்கியமான சாதனங்கள்பலவற்றை ஏற்படுத்திக்கொண்டார்கள்.

மேனடுகளில் வெளிச்சமுண்டாக்கும் பழையவழிகள்.

இங்கிலண்டு, ஜெர்மனி முதலிய தேசங்களிற் பூமியைவெட்டி, வெகு ஆழத்தில் அகப்படும் கனிகளிலிருந்து நிலக்கரி என்ற கரிவஸ்துவை வெளியிலெடுத்து, அதை நாம் விறகுக்கட்டைகளை அடுப்பில் உபயோகிப்பதுபோல, உபயோகித்துவந்தார்கள். பின்னர், அந்நிலக்கரியைப் பெரியகங்காளங்களில் இறுக்கி அடைத்துக் காய்ச்சுவதினால் நன்முக எரியும் ஒருவாயுவையும், கீல் அல்லது தார் எண்ணெய்போன்ற சில திரவபதார்த்தங்களையும், கடைசியாகக் கங்காளத்தில் நல்ல ஒரு கரியையும் பெறலாமென்பதைக் கண்டார்கள். இவ்வாறு கிடைக்கும் வாயுவை அபரிமிதமாக உண்டுபண்ணித் தெருக்களிலும் பொதுத்தலங்களிலும் வெளிச்சமுண்டாக்குவதற் குபயோகித்தார்கள். இதனுலுண்டாகும் பிரகாசம் மிகுதியாக இருந்ததனல் ஜனங்களும் அதைச் சிலாகித்துச் சாதனமாக்கிக்கொண்டார்கள். இந்த நிலக்கரிவாயுவை இன்னமும் உண்டாக்கி உபயோகித்துவருகிறார்கள். கருமையுள்ளதும் நல்வாசனையில்லாததுமான அந்தத் தார் எண்ணெயிலிருந்துதான் நம் கண்ணைக்கவரும் பலவர்ணமுள்ள சாயச்சரக்குகளைப் பேதித்து உண்டாக்குகிறார்கள். நம் ராஜதானியில் நிலக்கரி அருமையாய்த்தான் கிடைக்கிறது. அதனல் நம்முடையபிரதேசங்களில் இந்தமாதிரியான நிலக்கரிவாயுவை உபயோகிப்பதில்லை. ஆனல் நம் கலாசாலைகளில் ரசாயனப்பயிற்சி செய்வதற் கனுகூலமாக மண்ணெண்ணெயைப் பலமாகக்காய்ச்சி உடைத்து ஒரு எரியும்வாயுவாகமாற்றி அதை வெளிச்சத்துக்கும் சூடுண்டாக்குவதற்கும் உபயோகித்துவருகிறார்கள்.

மேனட்டார்களின் புதியவழிகள்.

மேற்சொல்லிய வாயுக்களைக் காற்றுடன் கலவாமல் எரித்தால், நல்ல பிரகாசமுள்ள வெளிச்சம்கிடைக்கும். இந்த வெளிச்சத்தின் உஷ்ணநிலை

1300 சதாம்ச டிகிரியாகும். (கொதிக்கிற ஜலத்தின் உஷ்ணநிலை 100 டிகிரியாகும்) ஆனால், காற்றுடன் கலக்கச்செய்து எரித்தால், வெளிச்சம் அறவேயொழிந்து பிரகாசமில்லாதஒளி கிடைக்கும். இதன் உஷ்ண நிலை 1850 சதாம்ச டிகிரியாகும். இந்த இரண்டுவித ஒளிகளும் மிகுதியாக உபயோகிக்கப்பட்டுவருகின்றன. இந்த இரண்டு ஒளிகளின் உஷ்ணநிலையிற் பதார்த்தங்கள் என்ன என்ன மாறுதல்களை அடைகின்றன என்பதை ரசாயனிகள் ஆராயும்வழக்க முண்டு. 1884ம் வருஷத்தில் ஜெர்மனிதேசத்திலுள்ள ஹேய்டல்பர்க் நகரத்தில் வசித்த பிரபல கீர்த்திபெற்ற புன்சன்சாஸ்திரியின் சோதனைச்சாலையில் ஆயிர் வான் வேல்ஸ்பேக் என்ற அறிஞர் தம் ஆராய்ச்சிகளைச் செய்துவந்தனர். ஒருசமயம் இவர் முன்சொல்லிய பிரகாசமற்ற ஒளியிற் சில உலோகங்களின் பஸ்மங்களை (ஆக்ஸிஜங்களை) க் காய்ச்சி ஆராய்ந்தனர். முக்கியமாகச் சில அபூர்வலோகங்களின் ஆக்ஸிஜங்களைக் காய்ச்சிப்பார்த்தனர். கண்ணைப்பறிக்கும்படியான பிரகாசம் ஏதோ ஒரு ஆக்ஸிஜம் காயும்போது தென்பட்டது. உடனே தம் புத்திக்கூர்மையினால் அதன் நுட்பங்களைப் பலபட ஆராய்ந்தனர். ஆறு ஏழுவருஷகாலம் "கருமமேகண்ணாயினா"ராக அந்த ஆராய்ச்சியிற் செலவழித்துத் தாம் கண்டுபிடித்த நுட்பத்தை எல்லாருக்கும் பயன்படுத்தும்படியானவழியிற் பரிசீலனம் பண்ணினர். இப்பொழுது வருஷாவருஷம் அவர் ஏற்படுத்திய "மாண்டில்" (30) முப்பதுகோடி செலவாகின்றனவென்றால் அதன் அருமை பெருமைகளை என்னென்று சொல்வது! இதுவன்றோ பேருபகாரம்!! தமக்குக்கிடைத்த நுட்பஅறிவை நுண்ணிதிற்பெருக்கி எல்லாநாட்டினருக்கும் உபயோகமாகும்படி செய்ததிறமை என்னே என்னே!!! நம் ஜில்லாக்களிற் குக்கிராமங்களிற்கூட இவ்வரியபண்டிதரின் செய்வினைத் திறத்தாலேற்பட்ட 'மாண்டில்' அழகாகப் பிரகாசிக்கும் "காஸ்லைட்" அல்லது "வாஷிங்டன்விளக்கு" என்பன பட்டினப்பிரவேச காலங்களில் உலாவத்தலைப்பட்டுவிட்டன. பழையகாலத்துத் தீவர்த்திகளும் சக்கரத்தீவர்த்திகளும் பந்தங்களும் எங்கேயோ பறந்தோடிவிட்டன. கல்யாணக்கொட்டகைகளுக்கும் மகாநாடுகள்கூடும் பெரியமண்டபங்களுக்கும் இவைகளே வரவழைக்கப்படுகின்றன. பழையனகழிந்து புதியன புகுந்தேவிட்டன!! நாமும் தெரியாமலே அதற்கு உட்பட்டு நடக்கின்றோம். ஒவ்வொருவருஷமும் முப்பதுகோடி மாண்டில்கள் உபயோகிக்கப்படுகின்றனவென்றேன். மாண்டில்ஒன்று அரைரூபாவாக விற்கப்படு

கிறது. ஆகவே இந்த மாண்டில்செய்யும் தொழிலாளருக்குப் பதினைந்து கோடிரூபாய் விலைமுதலாகவேண்டும். இது சென்னைராஜதானியின் நிலத்தீர்வையின் முக்காற்பங்காய்விட்டது.

## மாண்டில்செய்யும்விதம்

இந்தமாண்டில் என்பது கொசுவலைபோன்ற கண்களையும் சோளக் கதிர்போன்ற குழலுருவத்தையும் உடையது. பருத்திநூலால் இம் மாதிரி உருவம் முதலில் நெய்யப்படுகிறது; பிறகு தோரியம் நைட்ரேட், சீரியம் நைட்ரேட் என்ற வஸ்துக்கள் கரைந்த ஒரு திரவத்தில் அந்நூ லாடையை ஊறவைத்து உலர்த்துகிறார்கள். பின்னர் அதை இலேசாகக் கொளுத்திவிடுகிறார்கள். நூல் எரிந்துவிடுகிறது. நூலில் ஊறி உலர்ந் திருக்கும் தோரியம் நைட்ரேட்டும் சீரியம்நைட்ரேட்டும் தோரியம் ஆக் ஸிஜும் சீரியம்ஆக்ஸிஜும் என்ற பஸ்மங்களாக மாறி உருக்குலையாமல் முன்பிருந்த நூலாடைமாதிரியே நிற்கின்றன. பிறகு இது நன்றாய்க் காய்ச்சப்பட்டு உறுதிப்படுத்தப்படுகிறது. ஆனால் இந்தநிலையில் இதைக் கையால் தொட்டு எடுத்தோமானால், ஒருநிமிஷத்தில் நொறுங்கிப் பொடியாய்விடும். ஆகையினால் அந்தப் பஸ்மஉருவம் கிடைத்தவுடன் அதைக் கல்லோடியன் என்ற ஒரு திரவத்தில் நனைத்து எடுக்கிறார்கள். உலர்ந்தவுடன் அது ஒரு வெண்மையான மாண்டிலாக ஆய்விடுகிறது. இந்த நிலையில்தான் இது கடைகளில் விற்கப்படுகிறது. இதை ஒரு தரம் வாஷிங்டன் விளக்கில் மாட்டி எரித்துவிட்டாற் பிறகு அதினின் றும் அதைப் பிரித்து எடுக்கக்கூடாது. அப்படி எடுத்தால் உடனே அது நொறுங்கிப் பொடியாய்விடும். கல்லோடியன் எரியக்கூடியவஸ்து; அது எரிந்து மறையவே, பழையபஸ்மந்தான் மிஞ்சுகிறது; அதைத் தொட்டாற் பொடியாய்விடும். இந்தப் பஸ்மந்தான், பிரகாசமற்ற, அதிக உஷ்ண நிலையிலுள்ள ஒளியின் ஊடேவர, மிகுதியாகக் காய்ச்சப்பட்டு பழுக்கப்பழுக்கக் காய்ச்சின இரும்புபோல் வெண்மையான வெளிச்சத் துடன் "சூரியன்விளக்கு" எனப் பிரகாசிக்கின்றது.

## மானேஸைட்மணல்.

முப்பதுகோடி மாண்டில்களும் செய்வதற்குத் தோரியம் ஆக்ஸிஜ மும் சீரியம் ஆக்ஸிஜமும் இன்றியமையாதன. தங்கச்சுரங்கம் கண்டு பிடிப்பதற்கு எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பூமிப்பரப்புமுழுமையும்

தேடிப்பார்ப்பதுபோல, மேற்சொல்லிய பஸ்மங்கள் கிடைக்கும் இடங்களைத் திரைகடலோடியும் கண்டுபிடிக்க முயன்றார்கள். அருமையுடைத்தென்று அசாவாமை வேண்டும். இவ்வாக்ஸிஜங்கள் "மானேசைட்" என்ற மணலில் அகப்படுகின்றன. ஆகவே இந்தமானேசைட்டுக்கு பெரும் கிராக்கி வந்துவிட்டது. முதன்முதலாக இந்த மானேசைட் நார்வே, ஸ்வீடன் என்ற ஐரோப்பியதேசங்களிற் கிடைத்தது. இவ்விடங்களிலிருந்துவந்த மானேசைட்டிலிருந்து கிடைத்த ஆக்ஸிஜங்களை வைத்துக்கொண்டுதான் ஆயிர் வான் வெல்ஸ்பாக் என்ற அறிஞர் தம் ஆராய்ச்சியை நடத்தினர். ஆனால் அவ்விடங்களில் இது அபரிமிதமாகக்கிடைக்கவில்லை. பிறகு அமெரிக்காதேசத்து யுனைடெட் ஸ்டேட்ஸிலுள்ள கரோலினா என்ற ஸ்தலங்களிற் கிடைப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இத்தலத்து மானேசைட் அவ்வளவு சாரமுள்ளதாகத் தோன்றவில்லையாயினும் வேறுவகையில்லாததினாலே அதை உபயோகித்துவந்தார்கள். பின்னர்த் தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாட்டிற் கண்டுபிடிக்கப்பட்டது. இது முன்னதைவிட நல்ல குணம்வாய்ந்துள்ளது. மிகுதியாக அகப்படக்கூடியது. ஆகவே 'கரோலினா' மானேசைட்டைப் புறக்கணித்துவிட்டார்கள். மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி இரந்தழைத்தல் அவசியமன்றன்றோ? 1906-ம் வருஷம்முதல் பிரேஸில் மானேசைட்டைத்தான் தோண்டியெடுத்து உபயோகித்தார்கள். பின்னர் இம்மாதிரியான மானேசைட் மணல்கள் இலங்கையிலும் தென்னிந்தியாவிலும் மலையாளத்திலும் அகப்படுவதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. பிரேஸில் மானேசைட்டைவிட மலையாளம் மானேசைட் நயமாக இருக்கிறதாம். ஆகவே மேனாட்டார் இதை மிகுதியாக வேண்டஆரம்பித்தார்கள். இதைத்தான் நான் குமரிக்கருமணல் என்பது.

## ஜெர்மானியர்முயற்சி

இக்கனிஜங்களைத் தேடி உபயோகிப்பதில் ஒரு அபூர்வ விஷயம் கவனிக்கத்தக்கது. ஜெர்மனியில்தான் முதன்முதல் மானேசைட்டிலடங்கியுள்ள பலவஸ்துக்களையும் பிரித்தெடுக்க அறிஞர்கள் முயன்றார்கள். அவைகளின் குணங்களை ஆராய்ந்து அக்குணங்களுக்குத்தக்கபடி உபயோகிக்க யத்தனித்தார்கள். உலகத்திற் பல இடங்களில் அகப்படக்கூடிய மானேசைட் பூராவும் தமக்கேகிடைத்தால் நல்லது என்று

கினைத்தார்கள். அங்கங்கே பொறுக்கியெடுத்த அறிவாளிகளான தூதர்களை அனுப்பி அவ்விடங்களில் அகப்பட்ட மானேசைட் கருமணலைத் தம்மூர்களுக்கு அனுப்பச்செய்தார்கள். அக்காலத்தில் ஜெர்மானியரசாயனிகளுக்குமட்டும் மானேசைட்டிலுள்ள வஸ்துக்களைப் பிரித்தெடுக்குமாற்ற லிருந்தது. மற்றத்தேசத்து ரசாயனிகள் இதுவிஷயத்தில் அக்கரை எடுத்துக்கொள்ளவில்லை. ஆகையினாலே நாளடைவில் உலகத்திலுள்ள மானேசைட்மணலெல்லாம் ஜெர்மனிக்கே ஏற்றுமதிசெய்யப்பட்டது.

மலையாளமானேசைட்.

மலையாளத்திலுள்ள மணலும் அங்கேதான் போயிற்று. 1911-ம்வரு முதல் குமரிமுனைப்பக்கத்திலுள்ள மணலுக்கெல்லாம் ஜெர்மானியர்கள் முக்கியகுத்தகைதார்களாய் ஏற்பட்டுவிட்டார்கள். அந்தவருஷத்திலும் அடுத்தவருஷத்திலும் 3200டன் மணல் ஹாம்பர்க் துறைமுகம்போய்ச் சேர்ந்துவிட்டதாம். குமரிப்பக்கங்களிலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் ஏற்றுமதியான மானேசைட் கருமணலின் நிறையும் அதன்விலையும் கீழேகாட்டப்பட்டிருக்கின்றன:—

ஏற்றுமதி விவரங்கள்.

| வருஷம். | நிறை. | | விலை. | |
|---|---|---|---|---|
| 1911 | 832 | டன் | 360660 | ரூபா |
| 1912 | 1135 | ,, | 621285 | ,, |
| 1913 | 1235 | ,, | 630180 | ,, |
| 1914 | 1186 | ,, | 621165 | ,, |
| 1915 | 1108 | ,, | 498570 | ,, |
| 1916 | 1292 | ,, | 565710 | ,, |
| 1917 | 1940 | ,, | 847335 | ,, |
| 1918 | 2117 | ,, | 882285 | ,, |

மானேசைட்டின்விலை.

மேற்காட்டிய அளவில் முக்காற்பங்கு மலையாளத்திலிருந்து ஏற்றுமதியானதாகவும் அதன் விலை முப்பத்துமூன்றுலக்ஷரூபாவாக மதிக்கப்பட்டதாகவும் சர்க்கார் அறிக்கையிற் காணப்படுகின்றது. ஆனால் 1914-ம் வருஷத்தில் ஐரோப்பாவிற் கோரமான மகாயுத்தம் ஆரம்பிக்கவே,

இங்கிலாண்டுதேசத்தார்களும் அமெரிக்காவிலுள்ள யுனைடெட்ஸ்டேட்ஸ் தேசத்தார்களும் இம்மணலை ஏற்றிக்கொண்டுபோக ஆரம்பித்துவிட்டார்கள். 1910ம் வருஷத்துக்குமுன்பு இக்கருமணலைக் கவனிப்பார் கிடையாது. இப்பொழுது ஒருசாக்குமணலுக்கு முப்பது, முப்பத்தைந்து ரூபா விலையாகிறது. ஒருசாக்கு அரிசியின்விலைக்கு இரண்டுபங்காய் விட்டது.

மானேசைட்டின் வியாபாரம்.

இன்னும் ஒருவிதமாய் இதைக் கணக்குப்போட்டுப் பார்ப்போம். ஒருடன் மானேசைட்டிலிருந்து தொண்ணூராயிரம் மாண்டில்களுக்கு வேண்டிய தோரியம் ஆக்ஸிஜம் சீரியம் ஆக்ஸிஜங்களைச் சேகரித்துவிடலாகும். தற்காலக்கிரயப்படி, ஒருடன் மானேசைட்மணல் 675 ரூபாவாகவும் 90000 மாண்டில்கள் 45000 ரூபாவாகவும் மதிக்கப்படுகின்றன. இவை செய்வதற்கு வேண்டிய மற்றவஸ்துக்களுக்கும் சாதனங்களுக்கும் இருபதினாயிரம் ரூபா வேண்டுவதாகவைத்துக்கொண்டாலும் 1-டன் மணல்விலைபோகப் பாக்கி 24000ரூபா மற்றநாடுகளுக்குப் போய்விடுகிறது. மற்றக் கைத்தொழிற் சாமான்களை நாம் எப்படி அவசியமாக மதித்து நம் நாடோடி வாழ்நாள்களில் ஏராளமாக வாங்கி மற்றநாட்டுத்தொழிலாளர்களுக்கும் வியாபாரிகளுக்கும் கணக்கற்ற லாபத்தைக் கொடுத்துவருகிறோமோ, அதேமாதிரிதான் இம் மாண்டில் வாங்குவதிலும் செய்துவருகிறோம். வெண்ணெயைவைத்துக்கொண்டு நெய்க்கு அலைவார்களுண்டோ என்று சொல்லுவார்கள். ஆங்கிலமொழியைக் கற்று மேனாட்டு நாகரிகத்தையும் சாஸ்திரஞானத்தையும் நூறு வருஷமாக நாம் பெற்றுவந்தபோதிலும் நம்மிடமுள்ள வஸ்துக்களிலிருந்து நாம் அத்தியாவசியமாக நினைத்து வாங்கி உபயோகித்துவரும் சாமான்களை நாமே செய்துகொள்ள இன்னும் அசக்தர்களாயிருப்பது மிகவும் பரிதபிக்கத்தக்கதே.

நிற்க; மானேசைட் கருமணலில் தோரியம் ஆக்ஸிஜம்தவிர வேறு சிலவஸ்துக்களுமிருக்கின்றன. மாண்டில்கள்செய்வதற்கு முக்கியமாய்த் தோரியம் ஆக்ஸிஜமும் ஒருசிறிது சீரியம் ஆக்ஸிஜமுமே வேண்டியவை. ஆகவே மானேசைட்டின் விலை அதில் அடங்கியிருக்கும் தோரியம் ஆக்ஸிஜத்தின்பங்குக்குத் தகுந்தபடி ஏற்படுகிறது. அமெரிக்காவிலுள்ள பிரேசில்தேசத்தில் அகப்படும் மானேசைட்டில் 100-க்கு ஐந்து

அல்லது ஆறுபங்குக்குமேல் தோரியம் ஆக்ஸிஜம் கிடையாது; ஆனால் குமரியில் அகப்படும் மானேசைட்டிலோ நூற்றுக்கு 14 பங்குவரையிலும் தோரியம் ஆக்ஸிஜம் கிடைக்கிறதாம். ஆகவே குமரிமணலின் மேன்மையும் நயமும் வெளிப்படையாகின்றன. இந்தத் தோரியம் ஆக்ஸிஜத்தோடு நூற்றுக்கு அறுபதுவிதம் சிரியம் முதலிய லோகங்கள் சேர்ந்துகிடக்கின்றன. ஆகவே தோரியத்தைப் பிரித்து எடுக்கும் தொழிற்சாலைகளிற் சிரியமும் மிகுதியாகக் குவிந்துவிடுகின்றது. இதற்கும் ஒரு உபயோகத்தைக் கண்டுபிடித்தார்கள்.

ஆயிர் வான் வேல்ஸ்பாக் என்ற ரசாயனஅறிஞர் ஆறு, ஏழுவருஷம் சிரமப்பட்டுத் தோரியஆக்ஸிஜத்தையும் சிரிய ஆக்ஸிஜத்தையும் கலக்கவேண்டியவிகிதத்தைக் கண்டுபிடித்தார். கொசுவலைபோலப் பின்னிய நாலாடையிற் கேவலம் தோரிய ஆக்ஸிஜம் மாத்திரமிருந்தால், அது அவ்வளவு பிரகாசத்தைக் கொடுப்பதில்லை. அதனுடன் சிரிய ஆக்ஸிஜத்தையும் கலக்கவேண்டியிருக்கிறது. எந்தவிதத்திற் கலப்பது என்பதைத் தெரியப் பன்னெடுநாள் அவர் முயன்றுவந்தனர். சிறிது சிறிதாக இதையும் அதையும் சேர்த்துச் சோதித்துக் கடைசியில் தோரியம் ஆக்ஸிஜம் 99 பங்கும் சிரியம் ஆக்ஸிஜம் ஒருபங்குமாக விருந்தால்தான் சூரியவெளிச்சத்திற்கொப்ப வெண்மையானஒளி கிடைக்கிறதென்பதைக் கண்டுகொண்டார். வேறு எந்தவிதத்திற் சேர்த்தாலும் இவ்வளவு பிரகாசம் கிடைப்பதில்லை. இந்த விகிதந்தான் இன்றளவும் உபயோகிக்கப் பட்டுவருகிறது. இவரது ஊக்கமும் விடாமுயற்சியும் பொறுமையும் மிகவும் பாராட்டற்பாலன.

இன்னும், சிரியஆக்ஸிஜம் ஏராளமாகச் சேகரிக்கப்படுகின்றது என்றேன். முதலாவது அந்த ஆக்ஸிஜத்திலிருந்து அதன்மூலப் பொருளைக் கிரகித்தார்கள்; அது சிரியமென்பது. அது ஒரு மிருதுவான லோகம். சீக்கிரத்தில் தேயக்கூடியது. ஆனால் அது ஒரு இரும்பு அரத்துடன் உரசும்போது தீப்பொறிகள் பறக்கத்தெரிந்தன. உடனே இதை உபயோகத்துக்குக் கொண்டுவர வழிகள் தேடப்பட்டன. இந்தச் சிரியத்தைச் சுத்தஇரும்புடன்சேர்த்துக் காய்ச்சினால் ஒருமிசிரம் கிடைக்கின்றது. இதை ஆங்கிலத்தில் அல்லாய் என்பார்கள். இந்த அல்லாய் மிருதுவானதல்ல; தேயும் குணத்ததுமல்ல; ஆயினும் ஒரு அரத்தில் உரசும்போது தீப்பொறிகளை நிரம்பக் கொடுக்கின்றன,

ஆகவே இந்த அல்லாய்களைத் தீக்குச்சியின்றிப் புகைச்சுருட்டுப்பற்ற வைப்பதற்கும் எரியும் வாயுக்களை எரிப்பதற்கும் சௌகரியமானகருவி யாகச் செய்து இப்பொழுது விற்கிறார்கள். இது முந்திய சக்கிமுக்கிக் கல்லையும் எஃகையும் ஒருவாறு ஒத்திருக்கிறது. ஆனால், காலத்துக் கேற்ப நாகரிகமுள்ளதாய்த் தோற்றுகிறது.

இந்தத் தோரியம், சீரியம், மற்றுமுள்ள சில அருமையானலோகங் கள், ஆகிய இவை மாண்டில்தொழில் நல்ல விருத்தியையடைந்தபிற்பாடு, ஏராளமாய்ச் சோதனைக்கு அகப்படத்தொடங்கின. இந்த மாண்டில் ரசா யனத்தொழில் ஏற்பட்டதனாலே தங்கள் சோதனைச்சாலைகளில் ஆராய்ச்சி செய்வதற்கு அனுகூலமாகப் பல அரியலோகங்கள் ரசாயனிகள்கைக்கு எட்டின. இது ஒரு தொழிலானது கேவலம் சாஸ்திரத்துக்குச் செய் யும் பேருதவிக்கு ஒரு சான்றாகும். அதனாலேதான் இக்காலங்களிற் சர்வ கலாசங்க நிபுணர்களும் உயர்ந்த காலேஜ் நிபுணர்களும் கைத்தொழிற் சாலை நிபுணர்களுடன் அடிக்கடி அளவளாவி ஒருவருக்கொருவர் துணை யாய்நின்று ஆராய்ச்சிசெய்யவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது.

தற்காலத்தில் ரேடியம் என்ற ஒரு அபூர்வலோகம் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. அது அல்லும் பகலும் அனவரதமும் ஒளிவிட்டுக் கொண்டிருக்கிறது. அதினின்றுகிடைக்கும் ஒரு சேர்க்கைப்பொரு ளின் உதவியைக்கொண்டுதான் "ரேடியம்கடியாரம்" என்பதைச் செய்கி றார்கள். இந்த ரேடியத்தைப் பலவிதத்திலும் ஒத்திருக்கிற மீசோத் தோரியம் என்ற ஒருவஸ்து மானேசைட்மணலிலிருந்து தோரியத் துடன் இறக்கப்பட்டுவருகிறது. ஆனால் இதனுடைய அளவு நிரம்பக் குறைவாகத்தான் இருக்கிறது. 1120டன் மானேசைட்மணலிலிருந்து ஒருஅவுன்ஸ் மீசோத்தோரியம் கிடைக்கிறதாம். இது மலையைக்கிள்ளி எலியைப்பிடிப்பதுபோலிருக்கிறது. இந்த ஒருஅவுன்ஸின்விலை ஐம்பது லக்ஷ ரூபாவாகிறது. பொறுமையுடனும் விடாமுயற்சியுடனும் இவை களைச் சாஸ்திர அறிஞர்கள் செய்துவருகிறார்கள். இவை தாராளமாய் உலகத்திலுள்ள ஜனங்களின் உபயோகத்துக்குவந்தபாடில்லை. முயற் கொம்பு என்பதுபோல இவைரசாயன அதிசயங்களாகவும் அற்புதங்களாக வும் விளங்கிவருகின்றன. இன்று அற்புதப்பொருளாக இருப்பவை நாளை நாடோடிப்பொருளாகவருவது அனுபவமூலமாயும் சரித்திரமூலமாயும்

அறியப்படுகிறது. இவை, ஒரு சிறிது, ஜனங்களின் சிலவியாதிகளின் சிகிச்சையின்பொருட்டும் உபயோகப்படுகின்றனவாம்.

இவற்றால், குமரி முற்காலத்தில் தோன்றியவிவரத்தையும், இக்காலத்தில் விளங்கும் விவரத்தையும், அதன் சமீபத்திலுள்ள கருமணல் என்ன அமைப்பை உடையதென்பதையும், என்னகுணங்களையுடையதென்பதையும் அதிலிருந்து "கிட்சன்" விளக்குமுதலியவைகளுக்கு அத்தியாவசியமான மாண்டில்கள் எப்படிச் செய்யப்படுகின்றனவென்பதையும், அநன்விலை நயம் மேன்மை முதலிய தாரதம்மியங்கள் எப்படிப் பட்டனவென்பதையும், அது சாஸ்திர அறிஞர்களுக்கு எப்படி உபயோகமாகின்றதென்பதையும் ஒருவாறு தெரிந்துகொண்டோம்.

பழைய தமிழ்க்காவியங்களிலும் நூல்களிலுமுள்ள விஷயங்களையே திரும்பத்திரும்ப வருஷாவருஷம் சொல்லிக்கொண்டுவருவதோடு இதுவரையும் தமிழில்வராத சில புதிய மேனாட்டு அறிவு விஷயங்களையும், எடுத்துச்சொல்லவேண்டும் என்ற அவாவுடன் இவ் வுபந்நியாசத்தை எழுதிப் படிக்கமுயன்றேன். புதிதுபுதிதாகத்தோன்றிவரும் சௌகரியங்களை நாம் அனுபவிக்க எப்படிப் பின்வாங்குவதில்லையோ, அதேமாதிரி அப் புதுச்சௌகரியங்களுக்கு அடிப்படையாயிருக்கும் மேனாட்டுவழிகளையும் சூழ்ச்சிகளையும் கற்றுத் தமிழ்மொழியாகிய நம் தாய்மொழியில் தொகுத்து எழுதி, இன்னும் ஆங்கிலம் வாசிக்கத்தெரியாமலிருக்கும் லக்ஷக்கணக்கான நம் சகோதரஜனங்களுக்குத் தெரியும்வண்ணம் நாம் முயற்சிக்கவேண்டும். அதாவது மேனாட்டுச் சாஸ்திர அறிவுநூல் விஷயங்களையெல்லாம் தமிழில் மொழிபெயர்த்தோ அல்லது முதனூலாக எழுதியோ நாம் வெளியிடவேண்டும். இதுவே தற்கால அமைப்புக்கு இயன்ற சாதனமாகும். பொருளில்லாருக்கு இவ்வுலகமில்லை; அருளில்லாருக்கு அவ்வுலகமில்லை. பொருளைச் சம்பாதித்தே அருளைச் சேகரிக்க வேண்டும். "இல்லாரை யெல்லாருமெள்ளுவர் செல்வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" என்பது கேவலம் வெட்டுச்சுரைக்காயன்று.

"ஈட்டலுந்துன்பமற்றீட்டியவொண்பொருளைக்
காத்தலுமாங்கேகடுந்துன்பம்—காத்த
குறைபடிற்றுன்பங்கெடிற்றுன்பந்துன்பக்
குறைபதிமற்றைப்பொருள்"

என்பதெல்லாம் உபன்யாசத்துக்கு உபயோகப்படுமேயல்லாமல் உண்ப தற்கு உதவாது. நாமெல்லோரும் சன்னியாசிகளல்லோம். ஆதலின் நாம் பழைய துறைகளில் வேலைசெய்து சம்பாதிப்பதோடுநில்லாமற் புதிய மேனாட்டு இயற்கைச் சாஸ்திர அறிவுகளையும் நிறையத் தமிழிற் பரப்பித் தமிழ்மக்களும் தம்மைச்சுற்றியுள்ள பதார்த்தங்களின் குணங் களைத் தமிழ்மொழிபயிலுவதின்மூலமாகவே தெரிந்து அப்பதார்த் தங்களை மேன்மேலும் தம்முடைய உபயோகத்துக்குக் கொண்டுவரும்படி யான வழிகளைத் தேடச்செய்வதில் நாம் முயன்றுவரவேண்டும். நம் தமிழ்ச்சங்க ஆதரவில் நடக்கும் பரிக்ஷையில் முதன்மையாகத் தேரும் மாணவருக்குப் பரிசளிப்பதுபோல, வருஷத்துக்கு ஒருமுறையோ அல்லது பலதடவையோ தக்கநிபுணர்களுக்குச் சன்மானம்செய்து உபநி யாசங்கள்மூலமாகச்சாதாரணஜனங்களுக்கும்தெரியும்வண்ணம்மேனாட்டு அறிவுநூல்விஷயங்களை வியாபிக்கச்செய்யும்படி ஒருசங்கம் ஏற்படுத்த வேண்டும். மணிமேகலையிற்கண்ட வழக்கமென்ன? விழாவறைகாதை யில்,முரசறைவோன் முதலில் ஊரைவாழ்த்திப் பின்னர், "தருமோபதே சஞ் செய்ய அறிந்தவர்களே! பந்தரிலும் அம்பலங்களிலும் சென்று பிர சங்கம்புரிமின்; சமயவாதிகளே! வித்யாமண்டபத்தையடைந்து இருத் தற்குரிய இடங்களிலிருந்து வாதம்புரிமின்; யாரிடத்தும் பகையும் கோபமும் கொள்ளன்மின்" என்று முரசறைந்து இந்திரவிழாவைத் தெரி வித்தான். இக்காலத்துக்கேற்பச் "சோதனைமண்டபங்களைப் பெரிதாகக் கட்டி, நம் சகோதரர்களுக்கு மேனாட்டுச் சாஸ்திர அறிவு விஷயங்கள் தெள்ளிதிற் புலப்படும்படி பல பதார்த்தசோதனைக் காட்சிகளுடன் சாஸ் திரப் பிரசங்கங்கள் புரிமின்" என்பதையும் சேர்க்கவேண்டுமென்பது என் அபிப்பிராயம். இயற்கையறிவுமுதிர்ச்சிக்குத் தகுந்தபடிதான் நாம் நன்குமதிக்கப்படுவோம். இரண்டுகோடி தமிழ்மக்களும் ஆங்கிலங் கற்று இவைகளைக் கற்கமுடியவே முடியாது; இரண்டுகோடிதமிழ்மக்க ளும் தமிழிலேயே இவற்றைக் கற்றுக் கடைத்தேறக்கூடினும் கூடும். ஆதலினாலே நாம் அவ்வழியில் முயல்வோமாக. சோமசுந்தரக்கடவுள் அருள்புரிவாராக.

**K. C. வீரராகவையர் M.A.,**

---

ஸ்ரீ:

## மார்கழிநோன்பு

ஆகிய

# "தைந்நீராடல்"*



புண்ணியபூமியாகிய பாதகண்டத்து வாழும் நன்மக்களெல்லாம் அநாதிகாலமாகத் தத்தம் வருணாசிரமநிலைகட்கேற்பக் கருமாநுஷ்டானங்களைக் கைக்கொண்டுவாழும் இயல்பினர் என்பது யாவரும் தெரிந்தது. உரியகருமங்களை ஊக்கத்துடன் நடத்திவருந் தேசமாதல்பற்றியே, இப் பாரதவருஷம் கருமபூமி என்னும் பெயர்பெறலாயிற்று. இக்கருமங்கள் யாவும் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற்பொருட்டு நிகழ்த்தப்படுவனவாகும். இவை, அவ்வவ் வாசிரமநிலைகட்கேற்ப எண்ணிறந்தனவாக உள்ளன. கிருகஸ்தாசிரமி கொண்டொழுகும் கர்ம விரதங்கள், உரியதெய்வத்தைப் பற்றியனவாய்ப் பெரும்பாலும் இம்மைப் பயன்கருதி நிகழ்த்தப்படுவன. இவற்றுள், யாகாதிகருமங்களொழிய, முன்னோர் அநுஷ்டானத்தையே பின்பற்றி அநாதிகாலமாக நடைபெற்று வரும் நோன்புகளும் சில வுண்டு. பங்குனிமீ பௌர்ணிமைக்குப்பின் நடைபெறுவதும் ஹோலி, ஹோளாகம் என்று வழங்கப்பெறுவதுமான காமநோன்பை வேதவிதியின்றிச் சிஷ்டாசாரமேபற்றியதென்று கூறுவர் முன்னோர்.

இவ்வாறு, இல்லறத்தார் நிகழ்த்திவந்த விரதங்களிலே "மார்கழி நோன்பு" என்பதொன்று பண்டைக்காலத்திற் பிரஸித்தமாக வழங்கியதென்பது, ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையாலும் திருவாதவூரடிகள் அருளிய திருவெம்பாவையாலும் தெரியவருகின்றது. திருப்பாவை வியாக்யானத்தின் தொடக்கத்தில் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை என்ற பெரியார் இவ்விரதத்தைப்பற்றிக் குறிக்குமிடத்து "இந்நோன்

---

* இது, மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் இருபதாம்வருஷக்கொண்டாட்டத்தில் Hon'ble ஸ்ரீமாந் K. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்கள் அக்கிராசனத்தின்கீழ்க் கூடிய வித்துவத்ஸபைமுன்பு படிக்கப்பட்டது.

புக்கு மூலம் என்னெனில், மீமாம்ஸையிலே ஹோளாதிகரணநியாயத்தாலே* சிஷ்டாசாரஸித்தம், 'மேலையார்செய்வனகள்' என்று ஸ்ரீ ஆண்டாள் தானும் அருளிச்செய்தாள்" என்று எழுதலால், மார்கழிநோன்புக்கு வேதவிதியில்லை யென்பதும், ஆன்றோர் அநுஷ்டானமே மூலமென்பதும் பண்டையோர்கொள்கையென்பது நன்குவிளங்கும்.

இவ்வாறு சிஷ்டாசாரமேபற்றி இந்நோன்பு வழங்கியதாகக் கூறப்பட்டிருப்பினும், அவ்வாசாரத்துக்கும் மூலவரலாறொன்று இருந்ததாகல் வேண்டுமென்பது நிச்சயம். அவ்வரலாறு யாது? என்று அறியமுயல்வதே யான் இன்று எடுத்துக்கொண்டவிஷயத்தின் நோக்கமாகும். என் விஷயத்தைத் தொடங்குவதற்குமுன் அறிஞர்க்கெல்லாம் அறிவித்துக்கொள்வதொன்று உண்டு. சைவரும் வைஷ்ணவர்களும் திருவெம்பாவை திருப்பாவை என்ற அடியார்பிரபந்தங்களைப் பாராயணஞ்செய்பவராய் மார்கழிமாதத்தைச் சிறப்பாகக் கொண்டாடிவருகின்றனர். அங்ஙனம் கொண்டாடிவருதற்கு அவரவர் தத்தம் மதரீதிக்கேற்ப வேறுவேறு ஐதிகங்கள் கூறக்கூடும். அக்கூற்றுக்களுட்புகுந்து இன்னார்கொள்கையே ஏற்புடையது என்று நிர்ணயிப்பதற்கு இங்கே நான் புகவில்லை. மற்று என்நோக்கம் என்னெனில், இந்நோன்புபற்றிப் பண்டைத்தமிழ்நூல்வழியாலும் பிறவழிகளாலும் தெரியும் வரலாறுகளை ஒருங்குதிரட்டி இம் மகாசபையின்முன் எடுத்துக்காட்டுவதேயாகும். மார்கழிக்கொண்டாட்டம் வைணவர்க்குள்ளும் சைவர்க்குள்ளும் சிறப்பாக நடைபெறுவதொன்றுதலால், அதன் ஆதிவரலாறு யாது? என்றறிவதில், தமிழபிமானிகட்கு விருப்பமிருப்பது இயல்பே. அதனால், செந்தமிழறிஞர்கள் யான் கூறுவனவற்றைச் செவிக்கொள்வார்கள் என்றே நம்புகிறேன்.

மார்கழிநோன்பின் ஆதிவரலாற்றை யறிவதற்கு வேறுசில ஆதாரங்களும் உண்டாயினும், முற்கூறிய ஆண்டாள் திருப்பாவையும் வாதவூரடிகள் திருவெம்பாவையுமே சிறந்தகருவிகளாகச் சொல்லலாம். இவற்றுள், திருப்பாவை முப்பதுபாசுரங்கள் கொண்டது. இத்திருப்பாவைக்குப் பூர்வீகர் பலர் வியாக்யானங்கள் செய்திருக்கின்றனர். அவற்றுள் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை அருளிய வியாக்யானமே பழமையும் பெருமையு முடையதாகும். திருப்பாவையிற்கூறித்த மார்கழிநோன்பின் வரலாற்றை அப்பெரியார் அடியில் வருமாறு எழுதுகின்றார்.

---

* வழங்கிவரும் வேதத்தால் விதிக்கப்படாதிருப்பினும் வஸந்தோத்ஸவாதிகளை மேலோர் வழக்காதல்பற்றி வேதவிகிதமென்று குறித்துணரும் நெறி,

(சர்வேசுவரன் உலகத்தை உய்விக்கவேண்டித்) "திருவாய்ப்பாடியிலே கிருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணித் தன்னுடைய ஸௌந்தர்யத்தாலும் குணசேஷ்டிதங்களாலும் பஞ்சலக்ஷங்குடியிலுள்ள பெண்களைத் தோற்பித்துக் கொண்டு ஒத்தபருவத்திற் பெண்களுந் தானுமாய் வளர்ந்தருளுகிற காலத்திலே, தானும் பிராப்த யௌவனனாய் (யௌவனமடைந்தவனாய்) அவர்களுக்கும் யௌவனம் வந்து தலைக்கட்டினவாறே கோபவ்ருத்தர் (முதியோரான இடையர்) எல்லாருங்கூடி "கிருஷ்ணன் தூர்த்தனாய் இராநின்றான்; இவன் முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது" என்று பார்த்து, இவர்களைக்கொண்டுபோய் நிலவறைகளிலே அடைக்க, பெண்களும் கிருஷ்ணனும் பண்ணின பாக்யத்தாலே வர்ஷமின்றிக்கேயொழிய, பெண்களிருந்து மனோரதிக்கிறார்கள்:—'கோதனராயிருக்கிற இடையர் வர்ஷார்த்தமாக நம்மை நோற்கச்சொல்லக் கடவர்கள், கிருஷ்ணன் இதுக்குக் கடைக்கூட்டனாகவும் (நிறைவேற்றிவைப்பவனாகவும்) கடவன்" என்று பெண்கள் ப்ரீதைகளாய்த் தரித்திருக்கிற தசையிலே, வர்ஷமின்றிக்கேயிருக்கிறபடியைக்கண்டு கோபவ்ருத்தரெல்லாருந் திரண்டு 'பசுக்களும் மனுஷ்யரும் பிழைக்கும்வழி ஏதோ?' என்று பார்த்து 'வர்ஷார்த்தமாக நோற்க வர்ஷம் உண்டாம்' என்று,—"இவ்வூரிற் பெண்களுடைய நோற்கக்கடவர்கள், இந்நோன்புக்கு இங்குத்தைக்கு அதிபனான ஸ்ரீநந்தகோபர்மகன் கிருஷ்ணன் கடகனாவான்" என்று அத்யவஸித்து (நிர்மானித்து) பெண்பிள்ளைகளை அடையவழைத்துக் கிருஷ்ணனையும் அழைத்துப் பெண்களை நோற்கச்சொல்லி 'இவர்கள் நோன்புக்கு நீ கடகனாகவேணும்' என்று கிருஷ்ணனை அபேக்ஷிக்க, அவன் 'எனக்கு க்ஷமமன்று' என்ன, 'இத்தனையுஞ் செய்யவேணும்' என்று மறுக்கவொண்ணாதபடி நிர்ப்பந்திக்க, அவனும் இசைந்தபின்பு, எல்லாருந் திரளவிருந்து "பெண்கள் நோற்பார்கள்; இதுக்கு வேண்டுவது கிருஷ்ணன் ஸஹகரித்துக்கொடுப்பான்" என்று ஓமறைந்து கிருஷ்ணன்கையிலே பெண்களைக் காட்டிக்கொடுத்து கோபவ்ருத்தரெல்லாரும் போனபின்பு, பெண்களும் கிருஷ்ணனுங் கூடவிருந்து 'திருக்குரவைகோத்த ராத்திரிபோலவே பெண்காள்! இதுவும் நமக்கு ஓர் இராத்திரியே' என்று கிருஷ்ணன் கொண்டாடி, "இனி அசிர்ப்பு (சந்தேகம்) பிறக்க வைகல் (நெடும்போது) இருப்போமல்லோம்; இப்போது எல்லாரும் போய் அபராத்ரியிலே வந்து எழுப்புங்கோள், நோன்புக்குக் குளிக்கலாம்படி" என்று அருளிச்செய்து, கிருஷ்ணனும் பெண்களைப் பிரிந்துபோய்த் தரிக்கமாட்டாமே நப்பின்னைப்பிராட்டி திருமாளிகையிலே புக்கான்; பெண்களும் பாஸ்பர ஸம்ஸ்லேஷத்தாலே (சேர்க்கையாலே) கால்நடைதந்துபோய்த் தத்தம் மாளிகையிலே புக்கு உறங்கப்புக்கவிடத்தில், கண்ணுறங்காமையாலே முற்படவுணர்ந்தவர்கள், கிருஷ்ணகுணசேஷ்டிதங்களை நினைத்து எழுந்திருக்கமாட்டாதே கிடக்கிறவர்களை உணர்த்தத் தனித்தனியே சென்றெழுப்பி எல்லாருங்கூடி உத்தேச்யமான ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையிலே சென்று கிருஷ்ணனை எழுப்பித் தங்கள் அபேக்ஷிதத்தை அறிவித்து......அபேக்ஷிதம் பெற்று முடிக்கிறது"—எனக் கண்டுகொள்க.

இவற்றால், கோகுலத்துள்ள ஆயர்கள் மழைபெய்யாக்குறையை நீக்கவேண்டிக் கண்ணனைத் தலைமையாக நியமித்துத் தங்கள் பெண்களை மார்கழிநோன்புநோற்கச்சொல்ல, அவர்கள் அதற்கியைந்து பெருமானையும் தோழிமார்களையும் துயிலுணர்த்தி அழைத்துக்கொண்டு, யமுனாநதியில் மார்கழிநீராடி நோற்றுக் கண்ணபிரானை நாயகனாகப் பெறும் தங்கள் மனோரதத்தை அடையப்பெற்றார்கள்—என்பதே ஆண்டாள் அருளிய திருப்பாவையின்வரலாறென்பது அவ் வியாக்யாதாவின் கருத்தாதல் விளங்கும். ஆனால் மேலேகுறித்தசரித்திரத்திற்கு ஆதாரமாயுள்ள நூற்பிரமாணம் அவ்வுரையாளராற் காட்டப்படவில்லை. ஆயினும் ஸ்ரீமத்- பாகவதம், தசமஸ்கந்தம் 22-ஆம் அத்யாயத்தில், கண்ணன் கோபியர் துகில்கவர்ந்த சரிதங்கூறுந் தொடக்கத்தில் மார்கழிநோன்பு பற்றிய முக்கியமான செய்திகள் கூறப்படுகின்றன. அதன் மொழிபெயர்ப்பு அடியில் வருமாறு.

"அரசனே! கோகுலத்துள்ள பெண்கள் ஏமந்தருதுவின் முதல்மாதத்தில் (=மார்கழியில்) காத்யாயனிபூஜையாகிய விரதத்தைத் தொடங்கி ஹவிஸ்ஸைப் புஜித்துக்கொண்டு அதனை நடத்திவந்தார்கள். அருணோதயத்தில் அவர்கள் எழுந்திருந்து யமுனாநதியில் ஸ்நானம்பண்ணி மணலால் காத்யாயனிதேவியின் உருவத்தைச் சமைத்து, சந்தனம் மலர் தூபம் தளிர் பழம் இவற்றாலும், சிறந்த நைவேத்யங்களாலும் அத்தேவியைப் பூஜித்தனர். "காத்யாயனீ! ஏ மஹாமாயே! ஏ மகாயோகினி! ஏ ஈஸ்வரி! உன்னை வணங்குகிறோம்; எங்களுக்கு நந்தகோபர் மைந்தனாகிய கண்ணனை நாயகனாக அருள்வீராக"— என்ற இந்த மந்திரத்தை ஜபித்தவர்களாய் அவர்கள் கண்ணனைத் தியானித்துக்கொண்டு ஒருமாசகாலம் பூஜைசெய்து விரதத்தைவிடாமல் நடத்திக்கொண்டுவந்தனர். அக்கோபகன்னியர் ஒருநாள், யமுனாநதியில் ஸ்நானஞ்செய்வதற்காக அருணோதயத்தில் எழுந்திருந்து அவரவருடைய தோழிமார்களின்பெயரைச்சொல்லிக் கூப்பிட்டு ஒருவர்க்கொருவர் கையைக் கோத்துக்கொண்டும் கிருஷ்ணசரிதங்களைப் பாடிக்கொண்டும் நடந்துசென்றனர். அப்பெண்கள் யமுனாநதியின் ஒரு பக்கஞ் சேர்ந்து,அவ்விடத்தே,வழக்கப்படி தங்கள் ஆடைகளை அவிழ்த்துவைத்துவிட்டுக் கண்ணன் சரித்திரங்களைக் கானஞ்செய்துகொண்டு நீரில் விளையாடுவாராயினர். பரமயோகிகளுக்கும் யோகியும் ஸர்வஜ்ஞனுமாகிய கண்ணபிரான் கோபகன்னியர் அங்ஙனம் நீர்விளையாட்டுநிகழ்த்துவதறிந்து, அப்பெண்களின் விரதபலத்தை அளிப்பதற்காகத் தம் நண்பர்கள்சூழ, அவ்விடஞ் சென்றார்."

என்றும், சென்றபெருமான் கரையிலிருந்த அம்மகளிர் துகில்களையெல்லாங் கவர்ந்துகொண்டு பக்கத்திருந்த கடம்பமரத்திலேறிநிற்க,

நீராடிமுடிந்த பெண்கள் "ஆடையின்றி வாடையின் மெலிந்து, கையது கொண்டு மெய்யது பொத்திக்" கண்ணனிடம்வந்து தங்கள் துகில்களைத் தருமாறு பிரார்த்தித்தபோது, பெருமான் அவர்களன்பைப் பல வகையாகவுஞ் சோதித்து, முடிவில் அவரவர் துகில்களை அளித்துச் "சதிகளாகிய நீங்கள் எந்த நோக்கத்தைக்கொண்டு காத்யாயனீவிரதத்தை நடத்தினீர்களோ அந்த மனோரதம் இன்றிரவில் என்னுடன் கூடி விளையாடுவதால் நிறைவேறும்; எல்லாரும் கோகுலம் செல்லுங்கள்" என்று நியமித்தருளினர் என்றும் கூறப்படுகின்றது.

இவ்வுபாக்யானத்தையும் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை எழுதிய முன் சரித்திரத்தையும் கூட்டி நோக்குமிடத்து, நாடு வளங்குன்றிய போது மழைபெய்யவும், உத்தமநாயகர்களையடைந்து இம்மைநலமெய்தவும்வேண்டிக் கன்னியர் காத்யாயனீதேவியைக் குறித்து மார்கழிமுழுதும் நோற்பதும், அதன்பொருட்டு அவர்கள் வைகறையில் எழுந்திருந்து ஒருவரையொருவர் துயிலெழுப்பிச் சென்று நதிதீரமடைந்து நீராடித் தேவியின்பிரதிமையொன்றைச் சமைத்துத் தத்தம் இஷ்டாபிஷ்டங்கள் நிறைவேறப் பூஜிப்பதும் பண்டைமரபென்பது பெறப்படுகின்றது. மழைபெய்யாக்குறையை நீக்கவேண்டிக் கோபகன்னியரால் இந்நோன்பு நோற்கப்பட்டதாக ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை எழுதிய திருப்பாவைவரலாற்றுக்கு மூலம் எதுவாயினும் மேற்குறித்த பாகவத விஷயம், மார்கழிநீராட்டநோன்பை நன்குவிளக்குவதோடு, திருப்பாவைப் பாசுரங்களுக்கு ஏற்றசெய்திகள் பலவற்றை உடைத்தாயிருத்தலும் அறியத்தக்கதாம். ஆனால் இந்நோன்பு காத்யாயனி சம்பந்தமுடையதென்பதற்குத் திருப்பாவை மூலத்தில் ஆதாரமில்லையே என்று சிலர் சங்கித்தல் கூடும். இதற்கு, திருப்பாவைப் பாசுரங்களின் ஈறுகடோறும் வரும் 'ஏம்பாவாய்' என்ற தொடர், பாகவதத்திற்கண்டவாறு, ஈரநுண்மணலாற் சமைக்கப்பட்ட தேவியின்பிரதிமையைப்பற்றியதாகக் கொள்ளுதல் பொருந்துமாயின், தேவிசம்பந்தம் மூலத்தும் கூறப்பட்டதாகவே கருதலாம். பாவை என்பது, 'கொல்லிப்பாவை' என்புழிப் போல, ஈண்டுப் பெண்தெய்வத்தின் பிரதிமையைக் குறிப்பதாகும். 'நம்பாவைக்குச் செய்யுங்கிரிசைகள்' 'நம்பாவைக்குச் சாற்றிநீராடினால்' 'பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்' எனவரும் திருப்பாவைத் தொடர்களிலும் பிரதிமையொன்றுவைத்து வணங்குங் குறிப்புத்தோன்

றுதல் காணலாம். ஆனல், பாவையென வருமிடங்கட்கெல்லாம் வியாக்யானத்துள் 'நோன்பு' என்ற பொருளே தரப்பட்டுள்ளது. நோன்புப் பொருளிற் பாவையென்ற பெயர் வேறிடத்துவழங்குதல் அருமையாயுள்ளது. அதனல் அப்பொருளும் பிரதிமையடியாக வந்ததாகவே கொள்ளற்பாலது. இனித் திருமால்பக்தியிற் சிறந்த ஆண்டாள் தேவீ விரதத்தை மூலமாகக்கொண்டு பாடினர் எனல் தகுமோ என்று, சிலர் சங்கித்தல்கூடும். கண்ணனைத் தம் நாயகனுக அடைவதற்குக் கோபியர் காத்யாயனீதேவியை ஆராதித்துப்போந்தசெய்தி சரித்திரப்பிரஸித்தமாயிருக்கும்போது, அக்கோபியர்விஷயத்தையே ஆண்டாளும் கொண்டு கூறினரெனின் அதனில் இழுக்குமுளதாமோ? திருமாலைத் தன் நாயகனுக அடையவேண்டி 'உன்னையு முப்பியையுந் தொழுதேன்' எனக் காமனையும் அவன் தம்பியாகிய சாமனையுங்கூடத்-தொழப்புக்க* ஆண்டாள் தேவியைப்பிரார்த்தித்து அப்பெருமானைப் பெறமுயன்ற கோபியர்செய்திகூறியதிற் குற்றமென்னே? தேவீவிரதமானது கண்ணனையடையவேண்டிக் கோபியர் தங்குலாசாரப்படி நிகழ்த்தியதாதலாலும், உத்தேசியத்தின் பெருஞ்சிறப்பை நோக்குமிடத்து அஃது எவ்வழியாலும் அடையத்தக்கதொன்றாதலாலும் அதனில் சம்பிரதாயவிரோதம் நிகழச் சிறிதும் இடமில்லையென்க.

இனி, திருவாதவூரடிகள் அருளிய திருவெம்பாவையை நோக்குவோம். இஃது இருபதுபாசுரங்களுடையதாய்த் திருவாசகத்துள் அடங்கியுள்ளது. வாதவூரடிகள் திருவண்ணுமலைசென்று சிவபிரானை வணங்கிக்கொண்டு சிலகாலம் அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் நாளில் மார்கழிமாதம் வருதலும், திருவாதிரையுற்சவத்துக்கு முற்படப் பத்துத்தினங்களுள்ளகாலத்தே மகளிரெல்லாம் வைகறையிலெழுந்து வீடுகடோறும்போய், ஒருத்தியை ஒருத்தியும் பலருமாகத் துயிலுணர்த்தி அழைத்துக்கொண்டு பொய்கையிற் கூட்டமாகத் திருவாதிரைவரை நீராடக்கண்டு, அம்மகளிர்கூறியதாக அவ்வடிகள் பாடியதென்பர். இதனைத் திருவாதவூரார்புராணம் திருவம்பலச்சருக்கத்தில்,

---

* 'தையொருதிங்களும்' என்னும் திருப்பதிகம் பார்க்க.

"வென்றிடுங் கன்னிமேதிச் சென்னிவிக் கிரமன்றன்னைக்
கொன்றதன் பாவந்தீரக் குறித்திட வருள்வாய்போற்றி
அன்றுவந் தென்னையாளு மணியண்ணு மலையாய்போற்றி
என்றுதம் பரிவாலேத்தி யிறைஞ்சியங் குறையுநாளில்"

"மாதர்கொண் மாதரெல்லா மார்சழித் திங்கடன்னில்
ஆதிரை நாண்முன்னீரைந் தாகிய தினங்கடம்மின்
மேதகு மனைகடோறு மழைத்திருள் விடிவதான
போதிவர் தம்மிற்கூடிப் புனற்றட மாடல்செய்வார்"

"அன்னவ ரியல்புகண்டா ராங்கவர் புகன்றதாக
மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசிப்பின்னர்
கன்னியர் பாடியாடுங் கவின்கொளம் மனைகண்டன்னர்
பன்னிய பாடலாக வம்மனைப் பாடல்செய்தார்"

எனவரும் பாடல்களால் அறியலாம். இனி அத்திருவெம்பாவைப் பாசுரங்களை நோக்குவோம். அதன் ஒவ்வொருபாடலும் "எம்பாவாய்" என்றே முடிந்துநிற்றலோடு, "போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய்" என மார்கழிநீராட்டத்தைப்பற்றிக் கூறியும், அம்மாதத்தே பெண்கள் ஒருவரையொருவர் வைகறையிற் றுயிலெழுப்பி நீராடிக் கண்ணபிரானைக் கணவனாக அடைய ஆய்ச்சியர் வேண்டியதுபோலச்—சிவனடியாரைத் தம் நாயகராக* அடையப் பிரார்த்திப்பதையுணர்த்தியுஞ் செல்வதாம். அன்றியும், ஆண்டாள்,

"ஆழி மழைக்கண்ணா வொன்றுநீ கைகரவேல்
ஆழியுட் புக்கு முகந்துகொ டார்த்தேறி
யூழி முதல்வ னுருவம்போன் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோன் மின்னி வலம்புரிபோ னின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ வுலகினிற் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"

என நாடுசெழிக்க மழைபெய்யும்படி வருணனைவேண்டியதுபோல—

* 'முன்னைப்பழம்பொருட்கும்' 'உங்கையிற்பிள்ளை' என்றதிருவெம்பாவைப் பாசுரங்களை நோக்குக.

"முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவ
மென்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவில்லா வெங்கோமா னன்பர்க்கு
முன்னி யவள்நமக்கு முன்சுரக்கு மின்னருளே
யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்"

என்று வாதவூராடிகளும் மழைக்கடவுளை வேண்டினர். இவற்றால் திருப்பாவையும் திருவெம்பாவையும் வேறுவேறு தெய்வச்சார்புடைய வாயினும் ஒரே பொதுக்குறிப்புடையன என்பது வெளிப்படும். ஆனால், வாதவூராடிகளது திருவெம்பாவையானது தேவி சம்பந்தமுடையதென் பதற்குப் பிரமாணமுண்டோ என்பதே இங்கு எழக்கூடிய கேள்வியாகும். அதனை ஆராய்வேன். திருவாசகத்தின் ஒவ்வொருபகுதிக்கும் அத னதன்விஷயம் புலப்படுமாறு, தலைக்குறிப்பு அமைந்திருப்பது பலரு மறிவர். அக்குறிப்புக்களின் வாக்காலும் போக்காலும் அவை திருவாத வூராடிகளாலோ அன்றி அவர்க்குப் பின் வந்த பெரியோர்களாலோ பண்டைக்காலத்தே அமைக்கப்பட்டவை என்பது புலப்படத் தடை யில்லை. இத்திருவெம்பாவைக்கு அங்ஙனம் அமைந்த தலைக்குறிப்பு சத்தியை வியந்தது என்பதாம் [சத்தி-உமாதேவி]. இதனால் தேவியின் வணக்கமே திருவெம்பாவையின்கருத்தென்பது தெளிவாகும். இத் தலைக்குறிப்பையும், மார்கழிநீராட்டநோன்பிற் காத்யாயனி வணங்கப் படுவதாகக் கூறும் பாகவத உபாக்யானத்தையும், அவ்வுபாக்யானமே ஆண்டாள் திருப்பாவைக்கு மூலமாயிருத்தலையுஞ் சேர்த்து ஆராயுமிடத் துத் திருவாதவூராடிகளது திருவெம்பாவையும் தேவியின்விரதத்தை மகளிர் கொண்டாடிய முறையைக் குறிப்பதேயென்று கொள்ளத் தடை யில்லையென்க. ஆனால் "சத்தியை வியந்தது" என்பதற்கு—மனோன்மணி முதல் வாமையீறாகவுள்ள நவசத்திகளும் ஒருவரையொருவர் பிரேரிக்க அதனாற் பிரபஞ்சசிருஷ்டி தொடங்குங்காலம் மார்கழிமாதமென்றும், அக்காலத்து நிகழும் அந்தச்சத்திகளின் பிரேரகங்களையே வாதவூராடி கள் திருவெம்பாவையில் தமிழுணர்த்துவதாகக் கூறினரென்றும் சில ராற் கருத்துரை கூறப்பட்டுள்ளது. ஆயின், இக்கருத்து, திருவெம் பாவைவரலாற்றைக்கூறும் திருவாதவூரர்புராணத்தேனும் வேறுபழைய

நூல்களிலேனும் குறிக்கப்படவில்லை. நவசத்திகளும் திருவெம்பாவையில் வியந்து கூறப்பட்டனர் என்பதே பழையகருத்தாயின், அதன் தலைக்குறிப்பு "சத்திகளை வியந்தது" எனப் பன்மையாக அமைந்திருக்கும். திருவெம்பாவையின் இருபது பாடல்களுள் ஒன்பது பாடல்கட்குமட்டும் நவசத்திகளின் பிரேரணையை விஷயமாகக் கூறி, ஏனைப் பதினொருபாசுரங்களுக்கு அவதாரிகைகூறவியலாமற் செல்வதாலும் அக்கருத்துரை தெரியத்தக்கதாயில்லை. அன்றியும், அதன்பாடல்களில், சிருஷ்டிநிகழும்படி நவசத்திகள் முறையே பிரேரிக்குஞ் செய்தி குறிக்கப்படாமல், சிவனடியாரைத் தம் தலைவராக அடைதல்வேண்டிப் பெண்கள் பிரார்த்திக்குங் கருத்துக் குறிப்பிக்கப்பட்டிருத்தலும், "இன்னருளே யென்னப்பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்" என மழை பெய்யவும் பிறவாறும் வேண்டப்படுதலும் காணலாம். ஒருகால் அக்கருத்துரை, திருக்கோவையாருண்மை முதலியனபோலத் திருவெம்பாவையின் ஸ்வாபதேசப் (உள்ளுறை) பொருளாகச் சிலர் கூறியிருத்தல் கூடும். அதனுண்மை எத்தகையதாயினும், வாதவூரர்புராணங் கூறுமாறு, மார்கழியிற் பெண்கள் நீராடி நோற்பதை வாதவூரடிகள் கொண்டு கூறினர் என்பதே யாவரும் எளிதில் அறியக்கூடியது. 'சத்தியை வியந்தது' என்ற திருவெம்பாவைத் தலைக்குறிப்பு, காத்யாயனி அல்லது சத்தியின் விரதத்தையே புலப்படுத்தக் கூடியதென்ற என் கொள்கையை, மழைவேண்டிக் கூறியதாக முன்பு காட்டிய 'முன்னிக்கடலை' என்ற திருவெம்பாவைப் பாட்டிற் பராசத்தியே உவமைகூறப்பட்டிருத்தலும்,

"பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய்"

என அந்தச் சத்தி சிறப்பாக வணங்கப்பட்டிருத்தலும் நன்கு வலியுறுத்துதல் காணலாம்.

இங்ஙனம் திருப்பாவை திருவெம்பாவைகளால்* மார்கழிநோன்பின்வரலாறு அறியப்படுதல்போலவே, பண்டைச் சங்கநூல்கள்வாயிலாக

---

* யாப்பருங்கலவிருத்தியின் இறுதிச் சூத்திரவுரையுள், "கோழியுங் கூவின குருகி லழைத்தன-தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ-ஆழிசூழ் வையத் தறிவ னடியேத்திக்-கூழை நனையக் குடைந்து குளிர்புனல்-ஊழியுண் மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்" என்ற பாட்டொன்று உதாரணங்காட்டப்பட்டுள்ளது. இதனால், திருப்பாவை திருவெம்பாவைபோல வேறொருபிரபந்தமும் முன்பு வழங்கியமை தெரியலாம். 'அறிவனடியேத்தி' எனவருந் தொடரினின்று அஃது அருகக்கடவுளையோ, புத்தரையோ பற்றியதாதல்வேண்டுமென்று தோற்றுகின்றது. ஆயின் மார்கழிநோன்புக்கு அன்னோர் கூறும் வரலாறு தெரியக்கூடவில்லை. இஃதன்றிப் பிற்காலத்தில் தத்துவராயசுவாமிகள் பாடிய 'பாடுதுறை'யுள், சுவருபானந்தர் திருவெம்பாவைகள் இரண்டு, வேதாந்த பரமாகக் காணப்படுகின்றன.

வும் அதன் செய்திகள் சில இப்போது தெரியவருகின்றன. பரிபாடலுள், வையையாற்றின்சிறப்பைப்பற்றிக் கூறும் 11-ம் பாடலிலே இந் நோன்பின்செய்திகள் சிலவற்றை ஆசிரியர் நல்லந்துவனார் அடியில்வரும் அடிகளாற் கூறுகின்றார்:–

"கனைக்கு மதிர்குரல் கார்வான நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை
விரிநூ லந்தணர் விழவு தொடங்க
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலி னாய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியி
னூதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று;
மையாட லாடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீராடுதல்
நீயுரைத்தி வையை நதி" எனக் காண்க.

இவ்வடிகளாற் போந்தபொருள் வருமாறு:–"கறுத்த மேகங்கள் இடிக்குங் குரல் நீங்கப் பனிமிகுதலாற் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்தில், சூரியவெப்பந் தாக்காத கடைமாரியையுடைய மார்கழி மாதத்திலே, நிறைமதிநாளாகிய திருவாதிரையில், ஆகமங்களையுணர்ந்த பூசகர் தெய்வத்திற்குத் திருவிழாவைத் தொடங்கினாராக, 'பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக' என்று சொல்லி அம்பாவாடலைச் செய்வதற்குக் கன்னிப்பெண்கள் கூடி, சடங்கறிந்த முதிய பார்ப்பனிமார் நோன்பு நோற்கு முறைமையைத் தெரிவிக்க, பனியையுடைய அருணோதயத்திலே நீராடி, நீர்வாடைவீசுதலாற் கரையிற் றங்கியிருக்கும் அந்தணாது வேதாக்கினியை அக்கன்னியர் வணங்கியவராய், அவ்வக்கினியிலே தம் ஈரத்தைப் புலர்த்திநிற்க, அவ்வந்தணர் வேள்வித் தீயிற்பெய்யும் ஹவிஸ்ஸானது வையையே! உனக்கு வாய்ப்புடையதாயிருந்தது. ஓலையைப்பிடித்துப் படிக்கும் இளைய ஆண்மக்களோடு காமக்குறிப்பில்

லாத விளையாட்டைப்புரியும் கூட்டத்தாராகிய அப்பெண்கள், புலன்க ளடக்கித் தீ முன்னர்ச் செய்யுந்தவத்தை முன் (பிறவிகளில்) அடுத் தடுத்துச் செய்ததனற்போலும் தாயருகாகநின்று தவமாகிய நைந்நீ ராடலே, வையையே! நின்னிடமாக வாய்க்கப்பெறுவாராயினர்; இதனை நீ கூறுவாயாக"—என்பதாம்.

இப்பரிபாடற் பகுதியால், வைகைக்கரையில் மார்கழிநீராடி நோற் கும் நோன்பு சங்ககாலத்திலே கன்னிப்பெண்களுக்குட் பெருவழக்காயிருந் தமை தெளிவாகும். "திங்கள் மறுநிறையாதிரை...விழவுதொடங்க"என அவ்வடிகளுள் வருவதனால் 'மார்கழித்திங்கள் மதிநிறைந்த' நன்னாளில் இந்நோன்பு ஆரம்பமாகி நடைபெறுவதென்பது உய்த்தறியலாம். இங் ஙனம் தொடங்குவது, மார்கழியிறுதியோடு பூர்த்திபெறுவதாதல்வேண் டும். என்னெனில், அம்மார்கழிமாதமே இந்நோன்புக்குரிய காலமாகப் பாகவதமுதலியன குறிப்பித்தலால் என்க.

இனி, இந்நோன்பை 'அம்பாவாடல்' என்ற பெயரால் ஆசிரியர் நல் லந்துவனார் கூறுகின்றார். தாயோடு ஆடப்படுதலின் இப்பெயர்பெற்ற தென்பர், உரைகாரராகிய பரிமேலழகர். 'தாயருகாநின்று தவத்தைந் நீராடுதல்' என்று பின்வருந் தொடரைக்கொண்டு அவ்வுரையாளர் இப் பொருள் கருதினராகத் தெரிகின்றது. விரதநடத்துவோர் சிறுமியரே யாதலின் அவர் நீராடும்போது அவர்தாயரும் பக்கத்தில் நிற்பது இயல்பாதல்பற்றித் 'தாயருகாநின்று' என்று கூறப்பட்டதாகக் கொள் ளத்தக்கதேயன்றி, அங்ஙனம் தாயர்நிற்பதை ஒரு பெரிய விசேடமாக்கி, அதுபற்றி 'அம்பாவாடல்' என்று மார்கழிநீராட்டத்துக்கே ஒருபெயர் வழங்கலாயிற்று என்று கொள்வது ஏற்புடைத்தாமோ? என்பது ஆராய்ச்சிசெய்தற்குரியது. அதனால் முன்குறித்த பாகவதவரலாற்றுக் கிணைய அம்பாவாடலென்பதற்குத் 'தேவியின்பொருட்டு நிகழ்த்தப்படும் நீராட்டு' என்று பொருள்காணுதலே மிகவும் பொருத்தமுடையதாகத் தோற்றுகின்றது. அம்பா என்பது தேவியைக் குறித்தல் வெளிப்படை. மார்கழிநோன்பைத் திருவாதிரைக்குரிய இறைவனது விழாவாகப்* பரி மேலழகர் கருதினாராயினும் அச்செய்திபொன்றும் மூலத்தாற் புலப்படா மையும் காண்க.

---

* 'ஆருத்திராதரிசனம்' என்னும் திருவிழாவைப் பரிமேலழகர் கருதினர் போலும்.

இவ்வாறு, மார்கழித் திருவாதிரையில் நீராட்டத்துடன் தொடங்குவதாகக் கூறப்பட்ட நோன்பைத் திருப்பாவை கூறுமாறு 'மார்கழி நீராடல்' என்று குறியாது, 'தைந்நீராடல்' என்ற பெயராற் சங்கநூல்கள் கூறுகின்றன. இதனை-'தவத்தைந்நீராடல்' 'இன்னபண்பினின் றைந்நீராடல்' எனவரும் இப்பரிபாடற் றொடர்களிலும்,

"வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ"* (கலித்தொகை 59)

"நறுவீ யைம்பால் மகளி ராடும்
தைஇத் தண்கயம் போலப் பலர்படிந்து" (ஐங்குறு 84)

எனவரும் முன்னூற்றொடர்களிலும் கண்டுகொள்க.† பரிபாடல் கூறுமாறு, மார்கழிப் பௌர்ணிமையிற் றொடங்குவதாகிய நீராட்டத்தைத் தைந்நீராடலென இங்ஙனம் முன்னோர் வழங்கிவந்ததன் காரணமறிதல் வேண்டி, திவான்பஹதூர் L. D. சாமிக்கண்ணுபிள்ளையவர்களை யான் உசாவியபோது, அவர்கள்-பௌர்ணிமையும் திருவாதிரையும் மார்கழி மாதம் 15-ஆம் தெய்தியிலேனும் அதன்பின்பேனும் ஒன்றுசேர்வது இயல்பென்றும், அமாவாசையோடும் பௌர்ணமியோடும் மாதங்கள் முடிவுபெறுதலால் முறையே அமாந்தம், பூர்ணிமாந்தம் என்னும் பெயர் கொண்ட இருவகை மாதமுறைகள் வழங்கிவருவன என்றும், அவற்றுள், பூர்ணிமாந்தம் என்ற முறைப்படி மார்கழியிடையிற் பௌர்ணிமைக்குப் பின்வரும் மாதம், மார்கழியின் பிற்பகுதியும் தையின் முற்பகுதியுமாமென்றும், அதனால் மார்கழிநீராட்டம் அல்லது தைந்

* "கூரிய எயிற்றினையுடைய இளையமகளிர்க்குநடுவே வகுப்புடைய கோலத்தாலே பொலிவுபெற்று, நீ தைத்திங்களில் நீராடிய நோன்பின்பயனைப் பெறுவையோ, பெறுய்காண்" என்று இரந்து குறையுற்றுப் பின்னின்ற தலைவன் ஆற்ருனுய்த் தலைவியை நோக்கிக் கூறினன் என்க.

† 'ஒன்றொழிபொதுச்சொல்'(268), 'இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்கும்—பெயரும் வினையுங் குறிப்பி னானே' என்ற நன்னூற் சூத்திரங்களினுரையில் மயிலைநாதர், உயர்திணைவினைச்சொல் ஆணொழித்துநின்றமைக்கு-'மருவூரார் தைந்நீராடினர், இன்று இவ்வூராரெல்லாந் தைந்நீராடுப' என்ற தொடர்களை உதாரணங்காட்டலால் தைந்நீராடல் மகளிர்க்கேயுரியதென்பதும், ஆண்பாலார்க் குரியதன்றென்பதும் விளங்குதல் காண்க.

நீராட்டம் என்று இருவகையாகவும் அந்நீராடலைக்கூறுவது கூடுமென்றும் அன்புடன் கடிதமூலந் தெரிவித்தார்கள். மார்கழியில் நிகழ்த்தப்படுவதாகத் தெளிவாய் அறியப்பட்டதைத் தைந்நீராடல் என்று பரிபாடல் முதலியவை வழங்குதற்குப் பிள்ளையவர்கள் கூறிய இக்கருத்து மிகவும் ஏற்புடையதாகவேகொள்ளத் தடையில்லை. இதனால் மார்கழி நோன்பு முற்காலத்தே பூர்ணிமாந்தமுறைப்படி அநுஷ்டிக்கப்பட்டதாதல்வேண்டுமென்பதும், ஆயினும், ஸௌரமானப்படி தைம்மாதமும் அதனுடன்கலந்துவருதலால் 'தைந்நீராடல்' என்று அதற்குப் பெயர் வழங்கியிருத்தல்வேண்டுமென்பதும் பெறப்படுகின்றன.

இனி, மழைபெய்து நாடு செழிக்கவேண்டி ஆண்டாளும் வாதவூரடிகளும் கூறியதுபோலவே, 'வெம்பாதாக வியனில வரைப்பென' (=இம்மாநிலம் மழையாற் குளிர்வதாக) என்று கன்னியர்கூற்றில் வைத்துப் பரிபாடல் கூறுவதும் ஈண்டு நோக்கத்தக்கது. அன்றியும், கண்ணபிரானையும் சிவனடியாரையும் தம் கணவராக அடைதல்வேண்டிக் கன்னியர் நோற்பதாகத் திருப்பாவை திருவெம்பாவைகள் குறிக்குமாறு போலப் பரிபாடலினும்—"வரைவுமலிந்த தோழி, கன்னிப்பருவத்துத் தைந்நீராடத் தவந்தலைப்பட்டேம் என வையையைநோக்கித் தலைமகன் கேட்பச்சொல்லியது" எனத் துறைக்குறிப்பு எழுதப்பட்டிருத்தலும் ஒப்பிட்டு அறியத்தக்கதாம். இத்துறைக்குறிப்புக்கு—கன்னிப்பருவத்தில் தைந்நீராடி நோற்ற விசேடத்தால் தன்தலைவி உத்தமநாயகனைப் பெற்று இப்போது விளங்குவதாகத் தோழி மகிழ்ந்து கூறினள் என்பது கருத்தாதல் காண்க. இவற்றால், திருப்பாவை திருவெம்பாவை பரிபாடல் மூன்றும் ஒத்த கருத்துடையவாதல் நன்கறியலாம்.

இனிப் பெண்பாற்பிள்ளைப்பாட்டின்செய்திகூறும் பிங்கலந்தைச் சூத்திரத்துள் (1369)—

"பேணுஞ் சிறப்பிற் பெண்மக வாயின்
மூன்று மாண்டிற் குழமண மொழிதலும்
ஐந்தின் முதலா வொன்பதின் காறும்
ஐக்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்
பனிநீர் தோய்தலும் பாவை யாடலும்."

எனவரும் அடிகளிலே 'பனிநீர் தோய்தலும் பாவையாடலும்' என்பது, தைந்நீராடிப் பாவைநோன்புநோற்பதைப்பற்றியதாகவே சொல்லலாம். 'குழமணமொழிதலும்' (=பாவைக்கு மணம்பேசிவிளையாடலும்) என வேறுவருதலால், 'பாவையாடல்' என்பது, பாவையைவைத்து விளையாடலன்றென்பதும், 'பனிநீர்தோய்த'லுடன்கூடிவருதலின், அது, மார்கழிப்பாவைநோன்பேயாதல்வேண்டு மென்பதும்* உய்த்தறியக்கிடக்கின்றன. 'தைஇத்தண்கயம்' என்பவாகலின், 'பனிநீர்தோய்தல்' என்றுரென்க. எனவே, ஐந்துமுதல் ஒன்பதுவயதுவரையுள்ள சிறுகன்னியரே தைந்நீராடி நோற்றற்குரியர் என்பது பழைய விதியாதல் பெறப்படும். மேலேகுறித்த பரிபாடலிலும், காமக்குறிப்பில்லாத கன்னியர் நடத்தும் விரதமாகவே கூறப்பட்டிருத்தலுங் கண்டுகொள்க. இவ்வாறாயினும், சங்கத்துக்குப் பிற்பட்ட காலத்தே கன்னியரெல்லாரானும் இந்நோன்பு கைக்கொள்ளப்பட்டதாகவே, திருப்பாவை திருவெம்பாவைகளினின்று கருதப்படுகின்றது.

இனி, ஆண்டாளது திருப்பாவையில் இந்நோன்பின்செய்திகள் சில குறிப்பிக்கப்படுகின்றன. இவ்விரதகாலத்திற் கன்னியர்நிகழ்த்துங் கிரியைகளை—

"வையத்து வாழ்வீர்காள் நாமுநம் பாவைக்குச்
செய்யுங் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுட்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாமுடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையு மாந்தனையுங் கைகாட்டி
உய்யுமா றெண்ணி யுகந்தேலோ ரெம்பாவாய்"

என்னும் பாசுரத்தாலும், இந்நோன்புக்காலத்தே வழங்கும் 'வாத்தியங்களையும் விருதுகளையும்—

* "திருந்துபூ வல்லி யுந்தி தோணேக்கஞ் சிறந்த பாவை" எனப்படுதலால் (திருவாலவாயுடையார்புராணம். 27, 58.) மார்கழிநோன்பாகிய திருவெம்பாவையைப் பாவை எனவும் தனியே வழங்குதலுண்டு என்பது தெரியலாம்.

"மாலே மணிவண்ணா மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையா யருளேலோ ரெம்பாவாய்"

என்பதனாலும், நோன்புமுடிந்ததும் மகளிர்கொள்ளுங் கோலத்தையும் விருந்தையும்—

"கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா வுன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினா னன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போ மதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்"

என்பதனாலும், இந்நோன்பால் விளையும்பயன் மழைபெய்து நாடுசெழித்தலும் கோஸம்ருத்தியுமா மென்பதை—

"ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாந் திங்கண்மும் மாரிபெய்
தோங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதிற் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடநிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வ நிறைந்தேலோ ரெம்பாவாய்"

என்பதனாலும், இந்நோன்பைக் கன்னியர் நோற்பது தாம் ஒப்புயர்வற்ற தலைவனையடைந்து உய்வதற்கே என்பதை—

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்று மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றமேய்த் துண்ணுங் குலத்திற் பிறந்துநீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோ
டுற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்
மற்றுநங் காமங்கள் மாற்றேலே ரெம்பாவாய்"

—எனத் திருப்பாவையிலும்,

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்
என்ன குறையு மிலேமேலோ ரெம்பாவாய்"

"உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் மச்சத்தால்
எங்கள் பெருமா னுனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோ னல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்"

எனத் திருவெம்பாவையினும் வரும் பாடல்களால் அறியலாகும்.

இவ்வாறு இம்மைப்பயன்கருதிக் கன்னியரால் ஆதியில் நடத்தப் பெற்றுவந்த மார்கழி நோன்பானது, மறுமைகருதி அடியார்களால் ஈசுவரபரமாகப் பாடப்பெறும் பெருமையை அடைந்ததாயினும் அதன் பழஞ்செய்திகள் மறக்கப்பட்டும் கன்னிப்பெண்களாற் கைக்கொண்டு நடத்தப்படாமலும் போயிற்று. ஆயினும், அவ்வடியார்கள் அருளிய திருப்பாவை திருவெம்பாவைகளை முக்கியமாகக்கொண்டு அம்மாதத்து வரும் உதயகாலங்களில் நீராடுவதும் அத்திவ்யப்பிரபந்தங்களை யோதுவதும், ஆராதனைகள் நடத்துவதுமாய் ஆண்பாலார் பெண்பாலார் எல்லா

ராலும் சமயாசாரமாக இக்காலம் அனுஷ்டிக்கப்பட்டுவருகின்றது. திருவாதிரைக்குமுன் பத்துநாள்தொடங்கி அந்நாளோடு திருவெம்பாவை யிருபதுபாடலும் சைவர்களால் ஓதப்பெற்றும், நாளொன்றுக்கு ஒரு பாடலாகத் திருப்பாவைமுப்பதும் வைஷ்ணவர்களால் மாதமுழுதும் ஓதப்பெற்றும் கொண்டாடப்படுகின்றன. மார்கழிமுழுவதும் நீராட்டத்துக் குரியதாயினும், திருவாதிரையே அதற்குச் சிறந்தநாளாக முன்னோரெல்லாராலும் ஒருங்கு கொள்ளப்பட்டதாகும். இதனை,

> "மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை
> விரிநூ லந்தணர் விழவு தொடங்க"

என்னும் பரிபாடலாலும்,

> "மார்கழித் திங்கண் மதிநிறைந்த நன்னாளால்*
> நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்"

என்னும் திருப்பாவையடிகளாலும்,

> "..............................மார்கழித் திங்கடன்னில்
> ஆதிரைநாண்முன் னீரைந் தாகிய தினங்களெல்லாம்
> ............................புனற்றடமாடல் செய்வார்"

என்னும் திருவெம்பாவை வரலாற்றாலும் அறியலாம். ஆயினும், அநுஷ்டான முறையிலே சிற்சில பேதங்களைப் பண்டையோர் கொண்டிருந்தவர் போலவே தோற்றுகின்றனர்.

இவ்வாறு, மார்கழி நோன்பானது, தன்பூர்வநிலைமாறிச் சமயாநுஷ்டானமாக இப்போது எல்லாராலும் கொள்ளப்படினும், தமிழ்நாட்டின் பழைபவழக்கங்கள் பலவும் இன்றுங் காணக்கூடிய இடமாகிய மலையாள நாட்டிலே, அந்நோன்பு, தன் முன்னிலைமையிற் சிறிது மாறி இன்றும் வழங்கிவருதல் அறியத்தக்கதாம். அந்நாட்டார் கொண்டாடும் முக்கிய உற்சவங்களுள்ளே, 'திருவாதிரைத்திருவிழா' என்பது ஒன்றாகும். இப் பெரிய விழா, மார்கழியில் இளம்பெண்களால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று, அம்மாதத்து வரும் திருவாதிரைநாளோடு முடிவுறுவதாக வழங்குகின்றது. அங்கு நடைபெறும் இத்திருவிழாவின்செய்திகள், ஸ்ரீமாந்–கோபாலபணிக்கர் அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற "மலையாளமும் அதில் வாழ்நரும்" (Malabar and its folk) என்ற நூலிற் காணப்படுகின்றன. அவை வருமாறு:—

---

* மார்கழியின் மதிநிறைந்த நன்னாளாகிய பௌர்ணிமை, திருவாதிரைநக்ஷத்திரத்தை ஒட்டிவருவதாதல் காண்க.

"மலையாளத்தில் நடைபெறும் மூன்று முக்கிய உற்சவங்களிலே திருவாதிரை என்பதொன்றும். அஃது அங்கே தனுர்மாதத்தில் திருவாதிரைநாளிலே முறைப்படி நிகழும். இவ்வுற்சவம் பெண்களால்மட்டும் மிகுதியாகக் கொண்டாடப்படுகின்றது. உத்தேசம் ஒருநாள்தான் அது விசேடமாக நடைபெறும். இவ்வுற்சவம், புராணத்துக் கூறப்பட்டபடி, காமனுடைய அழிவுக்காலத்தைக் காட்டுகிறதென்பது ஜனங்களின் அபிப்பிராயம்......(காமனுடைய) துக்ககரமான கதையானது ஞாபகத்தில் வைக்கப்பட்டு முக்கியமாக ஸ்திரீகளால் வருஷத்துக் கொருமுறை விசேஷ உற்சவமாகக் கொண்டாடப்படுகிறது. குறித்த நாளுக்கு ஒருவாரத்துக்குமுன்பாகவே இவ்வுற்சவம் தொடங்கப்பெறும். காலை நாலுமணிக்கே பெண்களெல்லாம் படுக்கைவிட்டெழுந்து ஆசாரமுறைப்படி தடாகங்களில் ஸ்நானம்செய்வார்கள். அவருள்ளும், பாலப்பருவமுள்ள பெண்களே கூட்டங் கூட்டமாகச்சேர்ந்து நீராடுதல் அதிகம். அக்காலங்களில் எல்லாருந் தண்ணீருக்குள் மூழ்கி உற்சாகமாகப் பாடுவர். அப்பாட்டு, யாரேனும் ஒருபெண்ணால் சுருதியை அநுசரித்து மன்மதனைக்குறித்து ஆரம்பிக்கப்படும். இந்தப்பாட்டு, பெண்கள் தம் கைகளால் தண்ணீரைத் தட்டுவதனால் உண்டாகும் ஒரு விசேஷ சப்தத்தை அநுசரித்துநிற்கும். அவர்கள் இடக்கையை மூடித் தண்ணீர்மட்டத்திற்குக் கீழே ஜலத்தில் அமிழ்த்திக்கொண்டு வலது உள்ளங்கையைச் சாய்ப்பாக அடித்து இந்தத் தாளத்தை உண்டாக்குகின்றனர், இப்பெண்கள் பாடுங்காலமுழுதும் இவ்வாறு சத்தம் செய்யப்படும். இத்தகைய தாளத்துடன் ஒருபாட்டு முடிந்ததும் மற்றவரும் அதனைப் பின்தொடர்ந்துபாடியும், சிறிதுநேரம் இளைப்பாறி மறுபடியும் அதனைத் தொடங்கியும் இவ்வாறு முறைவைத்துப் பாடிக் குதூகலிப்பது வழக்கம். இவ்விதமாக அருணோதய காலம்வரை பெண்களெல்லாம் காலத்தைப்போக்கி உடம்பை நன்றாகத் துடைத்துக்கொண்டு சுத்தமும் மிக்க அலங்காரமுமுள்ள ஆடைகளை உடுத்தும் கண்களுக்கு அஞ்சனந்தீட்டியும், நெற்றிக்குத் தரித்துக்கொண்டும் தாம்பூலதாரணஞ் செய்தும் விளங்குவார்கள். பிறகு எல்லாப்பெண்களும் உற்சவத்தில் முக்கியமாக நடைபெறும் ஊஞ்சலாட்டத்தைத் தொடங்குவார்கள்.

* * * *

இவ்வாறு ஸ்நானம்செய்வதும் பாடுவதும் ஊஞ்சலாடுவதும் உற்சவக் கடைசிநாளோடு முடிவுபெறும். ஆனால் இக்கொண்டாட்டமானது இறுதிநாளின் முன் விசேடமாக நடைபெறுவதாம். உற்சவமுடிவில், காலையிலே எல்லாப் பெண்களும் ஸ்நானஞ்செய்தபிறகு கொஞ்சம் வள்ளம் குடித்துவிட்டுப் பகலில் ஒருபெரிய விருந்து நடத்துவார்கள். அவ்விருந்தில் உயர்ந்த மலைப்பழங்களும் சர்க்கரைகலந்த சிந்திற்பாயஸமும் உண்ணப்படும். அஸ்தமனம்வரையிற் கொண்டாட்டமும் ஆடல்பாடல்களும் நடைபெறும். விஷு, ஓணம் என்ற திருவிழாக்களிற் புருஷர்கள் எவ்வாறு மாலையில் வந்திருப்பது ஆவசியகமோ,

அவ்வாறு இத்திருவாதிரைத் திருவிழாவினும் வந்திருத்தல் ஆவசியகம். அப்படிச் செய்யத்தவறிய புருஷர்செயலை, தங்கள் ஸ்திரீகளைவிட்டுப் பிரிந்து போவதற்கு அடையாளமாகக் கருதுவார்கள். மார்கழிமாதத்துப் பனியுறைப்பும் ஊழ்காற்றின் குளிர்மிகுதியும், பெண்களின் மெல்லிய மேனிகட்கு மிக்க துன்பத்தைக் கொடுக்கக்கூடியதாயிருந்தும், இம்மகோற்சவத்தில், காலையில் நீராடுவதிலும் அந்நீராட்டத்தில் ஆடல்பாடல் நிகழ்த்துவதிலும் அதிக ஆனந்தத்தை அன்னோர் அடைகின்றனர். பனியின் உறைப்பால், காற்றில் இலை நடுங்குவதுபோலச் சரீரம் படபடத்துக்கொண்டிருந்தும் நீராடுகின்ற இக்கொண்டாட்டம் அவர்கட்கு அதிக மனோற்சாகத்தை அளிக்கின்றது. மலையாளநாட்டில் நடக்கும் இக்கொண்டாட்டத்தைப்போல வேறு எவ்விடத்துங் காண்பதரிது" எனக் கண்டுகொள்க

மேலேகாட்டிய செய்திகளால், மலையாளத்துத் திருவாதிரைப் பெருவிழாவானது, பழைய மார்கழி நோன்பினின்றே சிற்சில மாறுபாடுகளுடன் இக்காலத்து நடைபெறுவதென்பது புலப்படும். திருப்பாவை திருவெம்பாவைகளின் கருத்தைத் தழுவிச் சைவமுறையாகவோ வைணவ முறையாகவோ மலையாளத்துப் பெண்களால் இவ்வுற்சவம் நடைபெறுவதன்று; மற்றுத் தமிழ்நாட்டுப் புராதனவழக்கொன்றைப் பற்றியே அஃது அங்கு வழங்குவதாம். மார்கழி நீராடும்போது, ஜலத்திற் பெருஞ்சப்தம் கிளப்பிக்கொண்டு மலைநாட்டுப்பெண்கள் மூழ்கும் மாதிரிகையையே, வாதவூரடிகளும்,

"மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி"

—எனவும்,

"பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புன லாடேலோ ரெம்பாவாய்"

எனவும் அருளிச்செய்தல் காண்க. இவ்வுற்சவத்திறுதியில் மலைநாட்டு மகளிர் ஆடையாபரணாதிகளால் தம்மை அலங்கரித்துக்கொண்டு கூடி விருந்துண்பதும் அவ்விருந்திடையே பாயசம் என்னும் அக்காரவடிசில்*

* 'திருவாதிரைக்களி' என்னும் உண்டிவிசேடம் மார்கழித் திருவாதிரையுற்சவத்திற் சிறப்பாவேழுந்ததலும் இவ்வழக்கையே குறிக்கும்.

விசேடமாக உபயோகப்படுவதும் ஆகிய வழக்கங்கள் ஆண்டாள்காலத்தும் வழங்கியவைகளே என்பதைக் "கூடாரைவெல்லுஞ்சீர்" என்னும் பாசுரத்தில்,

"பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போ மதன்பின்னே பாற்சோறும்
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்"

எனவரும் அடிகளால் அறியலாம். இவ்வொற்றுமைகள் திருவாதிரைத் திருவிழாவுக்கும் பழைய மார்கழிநோன்புக்கும் உள்ளனவாயினும், அத் திருவிழா காத்யாயனீவிரதமாகக் கருதப்படாமல் மன்மதனைப்பற்றியதாக மலையாளநாட்டாராற் பாவிக்கப்படுகின்றது. ஆனால், மன்மதசம்பந்த முடையதாக அந்நாட்டார் அதனைக் கருதுவதற்குச் சிறிதும் நியாயமே யில்லை. என்னெனில், காமனோன்பு பங்குனிமாதத்தே பழங்காலமுதல் நடைபெறுவதேயன்றி மார்கழிக்குரியதன்றாம். ஸ்ரீஆண்டாளும், மார்கழி நோன்பைத் திருப்பாவையாற் பாடிக் காமனோன்பைத் "தையொரு திங்களும்" என்ற தனிப்பதிகத்தாற் கூறுவதோடு, அந்நோன்பு பங்குனியோடு முடிவுறுவதென்பதைக் குறிப்பித்தருளுதலும் காணலாம். ஆதியிற் கன்னியர்க்குள்மட்டும் நடைபெற்றுவந்த இவ்விரதம் மலையாள நாட்டிற் பெண்களெல்லாராலும் நடத்தப்படுவதாகவும் தெரிகின்றது.

மேலே யான் விரிவாகக் காட்டிப்போந்த விஷயங்களால், மார்கழி நோன்பின் ஆதிவரலாறு இத்தகைய தென்பதும், சங்கச்செய்யுள்களில் 'தைந்நீராடல்' என்று கூறப்படும் விரதம் அம்மார்கழிநோன்பின்வேறாகா தென்பதும் புலப்படக்கூடியன. காத்யாயனீவிரதமே மார்கழிநோன்பாகு மென்ற கொள்கையைத் 'திருவெம்பாவையாராய்ச்சி' என்ற தலைப்பின்கீழ்ச் சிலவருஷங்கட்குமுன் மேலைச்செவ்வற்பட்டிச் சன்மார்க்க சபையில் வெளியிட்டுள்ளேன். ஆயினும், அதன்பின் அறிந்த அரிய விஷயங்கள்பல, என்கொள்கையைப் பெரிதும் வலியுறுத்துவனவாய் அமைந்தமையால், அவற்றையெல்லாம் ஒருங்குதிரட்டி இம்மகாசபையில் இப்போது வெளியிடலாயினேன். செந்தமிழறிஞர் யான்கூறியவற்றையெல்லாம் செவ்விதின் ஆராய்ந்து ஏற்றபெற்றி கொள்ளக்கடவர்.

திருவல்லிக்கேணி } இங்ஙனம்,
16-9-21. } மு. இராகவையங்கார்.

ஸ்ரீ:

# விவாக ரகஸியம்.

(௩௩௯-ம் பக்கத் தொடர்ச்சி.)



கா:-பிரவேசஹோமத்துடன் விவாகவிதிகள் முடிந்துவிடுமல்லவா ?

ச:- இல்லை, இல்லை. மனையாளுடன் இல்வாழ்வான் அநுஷ்டித்துவர வேண்டிய ஸ்தாலீபாகம், வைச்வதேவம் முதலிய விதிகளின் உபதேசமின்றி விவாகச்சடங்கு முடிவுபெறுதல்லவா ?

கா:-ஆம்; மெய்தான்; இல்லாவிடில் மணமகள் இல்லறத்துணை (ஸஹதர்மசாரிணி) யாகமாட்டாளல்லவா ?

ச:- பிறகு தம்பதிகள், இல்வாழ்வார்க்கு ஏற்பட்ட நியமங்களுக்குரிய காரியங்களை யநுஷ்டிப்பதுடன், கல்யாணமானநாண்முதல் மூன் றிராத்திரி தரையிற் படுத்துக்கொள்ளுதல், பிரமசரியங் காத்தல், காரமும் உப்பும் இல்லாத உணவை யுட்கொள்ளுதல் முதலிய நியமங்களை வழுவாமல் அநுஷ்டிக்கவேண்டும். அவர்களுடைய படுக்கையினிடையில் அத்தி, அரசு, ஆல், இரளி இவற்றில் ஏதாவதொன்றின் வளாரில் சந்தனத்தைத் தடவி வஸ்திரம் அல்லது நூலைச்சுற்றி வைக்கவேண்டும். இந்த விருக்ஷங்கள் கந்தருவருக்கும் அப்ஸரஸுகளுக்கும் இருப்பிடமென்று வேதந்தெரிந்தவர்கள் கூறுகிறார்கள்.

கா:-ஏன் இந்தவளாரிற் கந்தருவனை ஆவாகனம் செய்யவேண்டும்?

ச:- இந்தக் கந்தருவனுக்கு விசுவாவசு என்று பெயர். விவாககாலத்திற் கன்னிகை அவன்வசமிருப்பதால் மணமகன் அவனைவணங்கித் துதித்துத் திருப்திசெய்து நல்ல சந்தானங்களையடையவேண்டியதற்காக ஸ்திரீயின்சரீரத்தைத் தொடவேண்டும் என்று விதி ஏற்பட்டிருக்கிறது.

கா:-விவாகம்நடந்தநான்முதல் மூன்றிரவு தம்பதிகள் பிரமசரியத்தை அநுஷ்டிக்கவேண்டுமென்றும், நான்காநாள் விடியற்காலையிற் கந்தர்வனுடைய அநுக்ரோஹத்தைப் பெற்றுத் தண்டத்தை எடுத்துவிட்டு ருதுதோஷத்தை ஸமனம்செய்து நல்ல முகூர்த்தத்திற் சேரவேண்டும் என்றும் சூத்திரக்காரர்கள் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்களல்லவா ?

ச:- ஆம்.

கா:-இதனால், சாஸ்திரம் ருதுமதிகளுக்கே விவாகத்தை விதித்திருக்கிறதென்று சிறிதும் ஐயமின்றி விளங்குகிறது.

ச:- தோழீ! நான் சொல்லுவதை நீ கொஞ்சம் கவனித்துக் கேட்க வேண்டும். முன்காலத்திற் சிராத்தம் முதலிய சடங்குகளில் மாம்சங்களை உபயோகித்தல், பிராமணர்கள் எல்லாஜாதியிலும் விவாகம் செய்துகொள்ளுதல், பிரும்ம க்ஷத்திரிய வைசியர் கிருஹங்களிற் சூத்திரர்களைக்கொண்டு சமையல்செய்வித்தல், வேதத்தை முழுதுமோதித் தீக்ஷையை முடித்துக்கொள்ளுகிறவர்களே இல்வாழ்க்கையிற் பிரவேசிக்க யோக்கியதையடைதல் முதலிய அநேக சமயாசாரங்கள் சாஸ்திரசம்மதமானவையென்று பூர்வீகஸ்மிருதிகர்த்தாக்கள் அபிப்பிராயப்படுவதாகத் தெரிகிறது. அக்காலத்தில் தர்மத்தை அநுசரித்துத் தழைத்தது காமம்; நான்கு புருஷார்த்தங்களில் அறமும் மோக்ஷமுமே முக்கியமானவையா யிருந்தன; பெரும்பாலோர் சத்வகுணத்தையே முக்கியமாய்க் கைக்கொண்டார்கள். பரலோகத்தில் ஏற்படுவதாகச்சொல்லிய தண்டனைகளில் மிகவும் பயமிருந்தது. உலகவாழ்க்கையிலுண்டாகும் சுகம் திரணம்போல் எண்ணப்பட்டது; அந்தணர்களும் தெருவிற் கிடக்கும் ஓட்டையும் பொன்னையும் ஒப்பநோக்குபவராய்க் கிடைத்ததைக்கொண்டு திருப்தியடைந்து பிரும்மத்தியானத்திலேயே ஈடுபட்டு அதையே பேரானந்தமாக எண்ணிவந்தார்கள். தனிகர்களும் பிரபுக்களும் அந்தணர்களுடைய வைராக்கியம் கர்மாநுஷ்டானம் முதலிய குணங்களைக்கண்டு அவர்களைப் பூஜித்து அணுவளவாவது அவர்களுடைய அநுக்கிரஹத்தைப் பெறுவதையே ராஜ்யலாபத்தைக்காட்டிலும் மேலானதாகக் கருதிவந்தார்கள். இப்பொழுதோ காமத்தையநுசரித்து வருந்துகிறது தர்மம்; பொருள், இன்பம் என்னும் இரண்டுபுருஷார்த்தங்களையே ஜனங்கள் முக்கியமாய்க் கருதுகிறார்கள். பெரும்பாலும் ரஜோகுண தமோகுணங்களே தழைத்தோங்குகின்றன. பரலோகமென்பது முயற்கொம்புபோலாய்விட்டது. உலகவாழ்க்கையில் அடையும் அதிகமான சுகாநுபவத்தையே ஜனித்ததற்கு முக்கியபலமாக வித்துவான்கள்கூட நினைக்கிறார்கள். அந்தணர்

களோ மண்ணாசை பெண்ணாசை பொன்னாசைகளால் வருந்தித் தங்களுக்கேற்பட்ட நியமங்களிலிருந்து வழுவிப் போசை, கோபம், காமம் முதலியவற்றுக்கு அடியவர்களாக அலைந்து திரிகிறார்கள். புலவர்கள், தனிகர்களின் பிரீதியையும் பிரபுக்களின் பிரீதியையும் சம்பாதிப்பதையே ஈசுவரப்பிரசாதத்தைக்காட்டிலும் மேலானதாகக் கருதி அவர்களுடைய வாசலிற்போய்க் காத்துத் தங்கள் ஸ்வரூபத்தைமாய்த்து அவர்களைத் தோத்திரஞ்செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இப்படியிருக்கையில் மூக்காலமுமுணர்ந்த மஹரிஷிகள் இயற்கையிலேயே ரஜோகுண தமோகுணங்கள் மேலிட்ட இக்காலத்தில் மேற்கூறிய மாம்ஸபோஜனமுதலிய ஆசாரங்கள் பொதுவில் எண்ணிறந்த அநர்த்தங்களை விளைவிக்குமென்று நன்குணர்ந்து அந்த ஆசாரங்கள் இக்காலத்துக்கு உதவாதனவென்று நிச்சயித்ததுடன் ருதுவாவதற்குமுன்னமே விவாகம்செய்வதுதான் இக்காலத்துக்குரியதென்றும் உறுதிசெய்து வெளியிட்டதாகத் தெரிறது. இதிலென்ன தோஷம்?

கா:-கம்பீரமான மனோபாவத்துடன் நீசொல்லுவது எனக்கும் நியாயமாகவே தோன்றுகிறது. உலகத்திற் காரியங்களெல்லாம் காலவசமாய் வேறுபடுகின்றன. பிரும்மசரியத்தை யநுஷ்டித்தல், குருகுலத்தில் வசித்தல், வேதமோதுதல், உதயத்தி லுபஸ்தானஞ்செய்தல், புருஷர்கள் முப்பதுவயதுக்குப்பிறகு இல்வாழ்க்கையிற் பிரவேசித்தல், அக்கினியை இடைவிடாது உபாசித்தல், வைச்வதேவ பலி நியமப்படிகொடுத்தல், ஸ்தாலீபாகம்செய்தல், முதலியசடங்குகளின் சமாசாரமே இப்பொழுது மறைந்துவிட்டது. ரஜோகுண தமோகுணங்கள் மேலிட்ட நாமெங்கே? சுருதியிலும் ஸ்மிருதிகளிலும் விதிக்கப்பட்ட தர்மங்களெங்கே? அந்தத் தர்மங்களிற் சிலவற்றைமாத்திரம் நாம் இப்பொழுது அநுபவத்துக்குக்கொண்டுவர வேண்டும் என்னும் வாதம் விவேகிகள் ஒப்புக்கொள்ளத்தக்கதில்லை.

ச:- பிறகு அக்கினிபூஜை முதலியவைசெய்து தம்பதிகள், தங்களுக்குள் பரஸ்பரம் அன்பு விருத்தியாகவேண்டும் என்கிற பயனைக் கருதிச் சில ஆகுதிகளை ஹோமம்பண்ணி ஜயாதிஹோமத்தையும் முடிக்கவேண்டும். அதன்பின் மணமகன், அக்கினிக்குமேல்புறத்திற் கிழக்குமுகமாக மணமகளை உட்காரச்செய்து ஹோமஞ்செய்

தெஞ்சியநெய்யிற் கொஞ்சமெடுத்து அவளுடைய தலையிற் றடவ வேண்டும். பின்பு மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு தம்பதிகள் ஒருவரையொருவர் பார்க்கவேண்டும். அதன்பிறகு மணமகன் மணமகளுடையமார்பிலும் மணமகள் மணமகனுடைய மார்பிலும் ஹோமஞ்செய்தெஞ்சிய நெய்யிற் சிறிதெடுத்துத் தடவவேண்டும். பின்பு மணமகன் மணமகளுடன் பள்ளியறையடைந்து தம்பதி களின் சரீரஸம்ஸர்க்கத்தைக்குறிக்கிறமந்திரங்களை நன்கு ஜெபிக்க வேண்டும்.

கா:—ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ளுதல், பிறகு மார்பைத் தொடுதல், அதன்பின் பள்ளியறையிற் பிரவேசித்தல் இவைகளைக் கேட்கும்பொழுது முதலிற் கண்களிப்படைதல், பிறகு மனத்தின் ஒருமைப்பாடு முதலிய காமசாத்திரத்திற் சொல்லுகிற பிரகாரங்கள் மனதிலுதிக்கின்றன.

ச:— பள்ளியறையில் ஜெபிக்கவேண்டியதாகக் குறிப்பிடப்பட்ட மந்திரங் கள், ஸ்திரீ புமான்களின் புணர்ச்சிவழிகளைத் தெளிவாய் உப தேசிக்கின்றன.

கா:—(புன்சிரிப்புடன்) தெரியாதவிஷயத்தை உபதேசிப்பதல்லவோ சாஸ் திரத்தின் இலக்கணம். ஆகாரம், நித்திரை, பயம், புணர்ச்சி முத லியவற்றைப் பக்ஷிகளும் அறிந்திருக்கின்றன. அப்படியிருக்க மந்திரங்கள் புணர்ச்சிவழிகளை வர்ணிப்பதற்குக் காரணம் என்னல் அறியமுடியவில்லை.

ச:— அந்தமந்திரத்தில், புணர்ச்சியென்பது உலகத்தின்க்ஷேமத்துக்காக ஏற்பட்ட வேள்வியேயன்றிச் சரீரசுகத்துக்காக ஏற்பட்டதன்று; தம்பதிகளின்புணர்ச்சியென்பது யாகஞ்செய்புமுன் அரணிக்கட் டையைக் கடைவதற்கு ஒப்பாகும்; இருவருக்கும் அச்சமயம் நல்ல (ஸத்வகுணம் மேலிட்ட) மனநிலை பொருந்தினல்தான் குணவான்க ளான புத்திரர்கள் பிறப்பார்கள்; குணவான்களான புத்திர பௌத்தி ராதிகளால் தம்பதிகளின்ஞாபகம் உலகத்தில் என்றும் அழியாது நிற்கும்; ஔஷதிகளின்விருத்திபோலப் பிரஜைகளின் ஜனனமும் உலகத்தின் அபிவிருத்திக்குக் காரணம்; இது, பிதிர்க்களுக்குச் செலுத்தவேண்டியகடனை நிவர்த்திப்பதற்காக அநுஷ்டிக்கவேண்

டிய முக்கியமாயும் பரிசுத்தமாயுமுள்ள சடங்குகளில் ஒன்று; கேவலம் சரீரசுகத்துக்காகக் கருதத்தக்கதன்று; அவரை, நெல் முதலிய விதைகளை விதைப்பதற்குக்கூட நல்ல முகூர்த்தம் முதலி யன பார்த்துச் செய்யவேண்டியதாயிருத்தலால், உலகத்துக்கு மிகுந்த நன்மையையும் பெருந்தீமையையும் விளைவிக்கக்கூடிய மனுஷ்யவித்தை விதைப்பதில் மிகவும் ஜாக்ரதையாய் நாள் நக்ஷத் திரங்கள் பார்த்துப் பரிசுத்தமான மனநிலையுடன் இருக்கவேண்டும்; இதுவிஷயத்தில் மஹரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட முறையி லிருந்து சிறிது வழுவநேர்ந்தாலும் நல்லொழுக்கமில்லாத படுமுதல் போன்ற பயனற்ற புதல்வர்களை உண்டாக்கி அவர்களால் உலகத் துக்கும் தமக்கும் மிக்ககேட்டை விளைவித்தபாவத்துக்குள்ளாவார் கள்; என்ற நுட்பமான அர்த்தவிசேஷங்கள் சொல்லப்பட்டுள்ளன. இவற்றைத் தம்பதிகள் நன்குணரவேண்டும்.

கா:—மிகவும் நன்றாயிருக்கிறது. காளிதாசனுங்கூட, சாகுந்தளத்தில் "துஷ்யந்தனால் உலகக்ஷேமத்துக்காக ஹோமஞ்செய்யப்பட்டதே ஜஸ்ஸை சகுந்தலை கருப்பத்திற் றரித்திருக்கிறாள்" என்றும், மேக தூதத்தில், குமரனைக்குறித்துச் சொல்லுமிடத்து, "ஈசனால் தேவர் களுடைய க்ஷேமத்துக்காக அக்கினியில் ஹோமஞ்செய்யப்பட்ட சூரியனுக்கும் மேலான ஒரு விசேஷமான தேஜஸ்" என்றும், நிஷே கம் என்கிற இந்தக் காரியமானது வேதத்தினால் ஐந்தாவது ஆகுதி என்று சொல்லப்பட்ட ஒரு பரிசுத்தமான வேள்வியென்று சூசிப்பித் தும், ரகுவம்சத்தில் திலீபனை வர்ணிக்கும்பொழுது "சாத்திரங் களை நன்குணர்ந்த அந்த அரசனுக்குப் பொருளும் இன்பமுங்கூட அறமாகவே மாறின" என்று முன்சொல்லிய விஷயத்தையே அழகு படுத்திக்கூறியும் மூன்காலத்தில் "தர்மத்தை அநுசரித்துவளர்ந் தது காமம்" என்பதை நன்குவிளக்கியிருக்கிறார்.

ச:— அதற்கென்ன சந்தேகம்? எல்லா சாஸ்திரங்களி னுட்கருத்தையு மறிந்தவர்களன்றோ மகாகவிகளெனப்படுவர். 'திதி' என்பவள் கச்யப மகரிஷியைப் பிரதோஷகாலத்தில் நிர்ப்பந்தித்துப் புணர்ந்ததனால் அஸுரர்கள் ஜனித்து உலகத்திற்குப் பெருந்தீங்கு விளைவித்தார்க ளென்று பாகவதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

கா:—இந்தப் பாலிபறைவிருத்தாந்தத்துடன் விவாகச்சடங்குகள் முடிந்து விடுகின்றனவல்லவா?

ச:— ஆம்.

கா:—தோழி! விவாகமுறைகளை நன்றாய் அறிந்துகொண்டேன். விவா கத்தில் மிகவும் முக்யமான தாலிகட்டும்விஷயத்தை நீ முழுதும் மறந்துவிட்டனை.

ச:- இல்லை; இல்லை; மஹரிஷிகள் செய்த சூத்திரங்களில் மங்களசூத்திரத்தைப்பற்றிய பிரஸ்தாபமேயில்லை. மணமகளின் கழுத்தில் மங்களசூத்திரங்கட்டவேண்டியதைக் குறிக்கும் மந்திரங்கூட வேதத்தில் ஓரிடத்தும் இல்லை.

கா:-கழுத்தில் மங்களசூத்திரங் கட்டும்பொழுது புரோகிதர்கள் ஏதோ சொல்லுகிறார்களே.

ச:- அவர்கள் சொல்லுவது சிஷ்டர்களாற் சொல்லப்பட்ட ஒரு சுலோகந்தான். அது மந்திரமன்று. "அழகியபெண்ணே! என் ஆயுளை விர்த்திசெய்யக்கூடிய இந்த மங்களசூத்திரத்தை உன்கழுத்திற் கட்டுகிறேன். நீயும் நூறாண்டு சுகமாய் வாழ்வாயாக" என்பது அந்தச் சுலோகத்தின் கருத்து. வடநாட்டில் அநேக இடங்களில் மங்களசூத்திரங் கட்டிக்கொள்ளும்முறை அநுஷ்டானத்தில் இல்லை. இதை உத்தேசித்தே "அந்தந்தத் தேசங்களிலும் கிராமங்களிலும் விவாகத்தில் அநுஷ்டிக்கப்படுகிற சிற்சில வழக்கங்கள் வேறுவேறுயுள்ளன. அவைகளை ஆங்காங்கு கண்டுகொள்ளவேண்டும். எல்லார்க்கும் பொதுவானமுறைகளைமட்டும் கூறுவோம்" என்று ஆச்வலாயனர் என்னும் மஹரிஷி தம் கிருஹ்யசூத்திரத்தின் றொடக்கத்திற் கூறியிருக்கிறார்.

கா:-(மிகவும் கௌரவத்துடன்) அம்மா! உன்னையும் ஒரு மஹரிஷியாகவே நினைக்கிறேன். உன்னிடமுள்ள தெளிவானஞானம் சாதாரணமாய் மனிதர்களுக்கு வாய்க்காது. மந்திரங்களின்கருத்தை உள்ளபடி அறிந்திருக்கிறாய். பழமையான ஆர்யதர்மங்களை ஆராய்ச்சி செய்யும் முறை மிகவும் பாராட்டத்தக்கதாயிருக்கிறது. உன்னுடைய லோகாநுபவம் மிகவும் ஆச்சரியப்படத்தக்கதாயிருக்கிறது. விஷயங்களைப் புகட்டுந்திறனும் வியக்கத்தக்கதே. உன்னுடைய இனிமையான சொற்கள் கர்ணாம்ருதத்தை வருஷிக்கின்றன. உன்னைப் பார்ப்பதனாலே ஆத்துமா பரிசுத்தமடைகிறது. ஸம்பாஷத்தினாலடையும்பயனை எழுதிமுடியாது. இவ்விதமாகவே கிருஹ்யசூத்திரத்திலுள்ள மற்றவிஷயங்களின் நுட்பமான உட்கருத்தையும் உன்னிடமிருந்தே அறிந்துகொள்ளவிரும்புகிறேன்.

ச:- உன்னிடமுள்ள ஸத்துவகுணத்தினால் நீ இவ்விதம் பேசுகிறாயேயன்றி என்னிடத்திலுள்ள குணத்தினாலன்று. இப்பொழுது மிகவும் நேரமாய்விட்டது. மற்ற விஷயங்களை வேறொருசமயம் பேசுவோம். சுபம். சுபம்.

ர. கிருஷ்ணமாசாரியர் M. A.
வித்யாநிதி.

---

உ

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்

# இருபதாம் வருஷக் கொண்டாட்ட

## மங்களவாழ்த்து.

திருமக டழீஇய வருண்முகப் பூவினை
யுரைமக டழீஇய வொண்மலர் நாவினை
தன்னுறு செய்கையைத் தண்கடல் வளாகத்து
மன்பதை யொழுக்கமா மகிழ்ந்துகொள் பேற்றினை
கயவர் தம்மையுங் கசிந்தாங் களிக்கு
நயவ ராக்கு நலம்புரி கொடையினை
ஆங்கில வாரியருந் தகத்திய னனையை
ஒன்னார் தம்மையு முருக்குமுறை சான்றனை
மன்னர் தம்மொடு மன்பதை மதிக்குந்
துன்னருந் தொல்சீர்த் துறைப்பணித் தலைமையை
தமிழறி வுடையரே தக்கோ ராமெனக்
குமிழ்முக் கரிவையர் கூறச்செய் குணத்தினை
இடமெனப் பொறியம ரிறையென வுரைக்கும்
வடமொழிப் பெயர்க்கு மாண்புதந் தாண்டனை
இணையை யாதவி னந்தண கேண்மதி
நின்னை யெமதிறை நீள்வளத் தேவை
தன்னையு மழியாத் தமிழையும் விழியெனக்
கொண்டுலகு புரக்குங் கோடாச் செங்கோல்
மன்னவர் தங்கண் மன்னவர் தமக்கெலா
நன்னர்செய் யிறையென நற்பெயர் படைத்த
காவல னம்மா கற்றுத்துறை போகிய
நாவலர் பாவலர் நண்ணு தமிழ்க்கூடற்
செந்தமிழ் மன்றத்துச் சென்னி யிருக்கைமிசை
மைந்துட னிருக்கென வாழ்த்திவ்வத் திருபான்
ஆண்டு விழாவை நடத்தென வளித்தனன்
ஆதலின்,
வெந்து பொறிப்பவுெங் கொந்தழ லுண்மணற்
கானத் தறகெழீஇ யானைக் காத்தென
நந்தமிழ் நயக்க நாடிய கடவுளாம்
அருமை சான்ற விருமைதரும் பெரியோய்
நற்றமிழ் வாணர் நயந்துதம் மில்லையு
மற்றுரை சான்ற நூலையு மகிழ்ந்து
போற்றிக்குறை மாற்றிப் பொற்புட னமைதற்
கேற்றவழி யொன்றனை யீதென வுரைத்து
வையகத் தின்பெலா மலர்ந்தொருங்கு பெறீஇ
வாழிதி பல்லாண்டு வாழிதி
யாழிசூ முலகி னறனெலாம் படைத்தே.

இங்ஙனம்,

ஸ்ரீ ராமநாதவித்யாலயம், சென்னகம். } K. S. நவநீதகிருஷ்ணபாரதி, தலைமைத்தமிழ்ப்பண்டிதன்.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று

மாதந்தோறும் வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

பத்தொன்பதாந்தொகுதி.

VOL-XIX.




பத்திராதிபர்:—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1920—1921.

# செந்தமிழ்ப்

# பத்தொன்பதாந்தொகுதியி னுள்ளுறை.

வாழ்க்கைப்பாட்டு:- ஸ்ரீமத். R. R. குணரத்தினம் அவர்கள் B.A., ௧௦௩

விவாகரகசியம்:- ,, வித்யாநிதி ர. கிருஷ்ணமாசாரியரவர்கள் M. A. ௨௬௫, ௨௬௭, ௩௩௯, ௪௩௦.

வைரப்புறக்கணிப்பு:- பத்திராதிபர் ௨௭௭

---

## இத்தொகுதியில் வெளிவந்த நூல்கள்:—

(முற்றுப்பெற்றவை)

1. அகராதிநிகண்டு:- பத்திராதிபர் ௧, ௨, ௩ பகுதிகள்.
2. திருநறையூர்நம்பி மேகவிடுதூது:- } உதவிப்பத்திராதிபர் ௪-ஆம் பகுதி.
3. திருக்குற்றாலமாலை:- உதவிப்பத்திராதிபர் ௭, ௮, ௯ பகுதிகள்.
4. தண்டலையார்சதகம்:- ஸ்ரீமத். சே.ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் ௯, ௧௦, ௧௧ பகுதிகள்

---

(முற்றுப்பெறாதது.)

1. பழமொழிமூலமுமுரையும்:- பத்திராதிபர் ரு, ௭, ௮, ௯, ௧௦ பகுதிகள்.

---